# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



ஸ்வீட் ஜோடீஸ்!

KALKI 01.06.2008 ரூ.10.00 96 பக்கங்கள்

## காதல் கவுன்சலிங்!



# கஷ்டப் படுத்தாத எங்க இஷ்ட தெய்வம்!

## வாசகர்களே!

- செவி வழி செய்தியாய் பல தலைமுறை கடந்து கதையாகி கடவுளாக மாறிய மூதாதையர்கள்
- தன்னையே தியாகம் செய்து குடும்ப தெய்வ அந்தஸ்து அடைந்தவர்கள்
- காவலாயிருந்து இறைத்தன்மை பெற்ற வீரர்கள்
- அமானுஷ்யமாய் இன்னும் உலவிக்கொண்டு அன்புடன் காத்தும், தண்டித்தும் வலம் வருவதாய் சொல்லப்படும் உங்கள் குலதெய்வங்களைப் பற்றிய அனுபவங்களை, வழிபாட்டு முறைகளை, அவற்றின் ஆதி கதைகளை புகைப்படத்தோடு அனுப்புங்கள்.

**விரைவில் கல்கி யில் புதிய பகுதியாகத் தொடங்கவிருக்கிறது**

## மினி இன்டர்வியூ

***பூஜை போட்ட அன்றே சர்ச்சையில் சிக்கிய 'வல்லமை தாராயோ' படத்தின் இயக்குநர், மதுமிதா. முதல் படத்திலேயே இத்தனை சோதனைகளா? மதுமிதாவிடம் பேசினோம்...***

“சர்ச்சைகளை நீங்க பிரச்னைகளா பார்க்கறீங்க. நான் சவாலா பார்க்கறேன். பார்த்திபன் சாருக்கும் எனக்கும் நடந்தது ஒரு சின்ன மிஸ்அண்டர்ஸ்டாண்டிங், அவ்வளவுதான்'' என்று சிரிக்கிறார்.

''என் பூர்வீகம் தமிழ்நாடுதான். ஆனா, நான் வளர்ந்தது படிச்சது எல்லாம் அயல் நாடுகள்லதான். ஃபிலிம் டெக்னாலஜி முறையா படிச்சிருக்கேன். என்னோட குறும்படங்கள் சர்வதேச பட விழாக்கள்ல கலந்துட்டிருக்கு; விருதுகள் வாங்கியிருக்கு; சினிமா பத்தி படிக்கிற காலத்திலேயே நான் அவுட் ஸ்டாண்டிங் ஸ்டுடண்ட்டா இருந்திருக்கேன். என்னதான் வெளிநாட்ல இருந்தாலும், படம் எடுத்தா அது நம்ம தமிழ் மண்ணுலதான்னு உறுதியாகவும் இருந்தேன்.

சமீபத்துலதான் எனக்குக் கல்யாணமாச்சு. என் கணவரும் அமெரிக்காவுல ஃப்ரிலேன்ஸ் எடிட்டரா இருக்கார். 'வல்லமை தாராயோ' படத்தோட போஸ்ட் புரொடக்ஷன்ல எல்லாம் அவரோட பங்களிப்பும் இருக்கு. என் வேலையோட நெளிவு சுளிவெல்லாம் அவருக்குச் சரியா தெரிஞ்சிருக்கு. என்னைச் சுதந்திரமா செயல்பட விடறாரு. நாளைக்கே குழந்தை குட்டிங்க வந்தாகூட, அவரோட துணையோடு இன்னும் சிறப்பா சினிமால செயல்பட முடியும்.

பார்த்திபன் சார் கூட எனக்கு எந்தப் பிரச்னையுமில்லைன்னாலும், அவர்

# ''பெண் இயக்குநர்னு பிரிச்சுப்



■ இயக்குநர் மதுமிதா

எனக்குச் சினிமா தெரியாதுன்னு சொன்னதுக்கு, நான் விளக்கம் சொல்லியே ஆகணும். நான் கௌதம் மேனன் சாரோட அசிஸ்டென்ட்தான். அவர் இயக்கின 'பச்சைக்கிளி முத்துச்சரம்' படத்தோட முதல் ஷெட்யூல் முழுக்க உதவியாளரா வேலை பார்த்திருக்கேன். 'வல்லமை தாராயோ' எடுத்த வரைக்கும் போட்டுக் காட்டினப்போ பார்த்த பார்த்திபன் சார், பத்து பக்கத்துக்கு எனக்குக் கடிதம் எழுதினார். அதுல என்னை 'நல்ல இயக்குநர்'னு குறிப்பிட்டதோடு, சில இம்ப்ரூவ்மென்ட் சொல்லி, சரி பண்ணச் சொல்லியிருந்தார். உடனே பண்ணினோம். ஆடியோ சி.டி. வெளியீட்டு விழா அழைப்பிதழ் ரெடி பண்றதுக்கு முன்னாடி, கிட்டத்தட்ட பத்து அழைப்பிதழ்களை ஒப்பிட்டுப் பார்த்துத்தான் பண்ணினோம். அதிலெல்லாம் நடிகர் பெயர் இல்ல... விருந்தினர்கள், அழைப்பாளர்கள் பெயர்கள்தான் இருந்தன. அதனாலதான் நாங்களும் போடல. ஆனா, அவரோட படம் இருந்தது. இது பார்த்திபன் சாருக்கு உறுத்தியிருக்கும் போல... என்னன்னமோ நடந்து போச்சு. எப்பவும் நான் திறந்த மனத்தோடுதான் இருக்கேன். எனக்கு எல்லாரும் ஒண்ணுதான்.

# பேசாதீங்க!

இப்பவும் சொல்றேன், பார்த்திபன் சாரை ரொம்பவும் மதிக்கறேன்.

இது முற்றிலும் வித்தியாசமான ஸ்கிரிப்ட்னுல்லாம் சொல்ல மாட்டேன். ஒரு கணவன் - மனைவிக்கிடையேயான புரிதல், அன்பு மற்றும் காதலில்லாத தன்மை பத்தி ஆழ்ந்து சொல்லியிருக்கேன். இது சர்ச்சைக்குரிய கதைன்னு இப்பவே சில பேர் சொல்றாங்க. படம் வர்ற வரைக்கும் வெயிட் பண்ணுங்கன்றதுதான் என்னோட வேண்டுகோள்.

பொதுவா, பெண் இயக்குநர்கள்னு எங்களைப் பிரிச்சுப் பார்க்கறதே எனக்குப் பிடிக்காத விஷயம். 'வல்லமை தாராயோ' இதோ ரிலீசாகப் போகுது. எனக்கு நல்ல பெயரை பெற்றுத் தரும் பாருங்க'' என்கிறார் அசாத்திய நம்பிக்கையில் இயக்குநர் மதுமிதா.

**- ஆல்ஃபர்டோ**





# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் :
044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

கெஸ்ட் டயலாக்!

# ரிங்டோன் ரகசியம்!



● தேவகி

'செல்'லின் செல்வர்கள் சிலரிடம் ரிங்டோன் ரகசியம் பற்றி கேட்டபோது...

**'குறையொன்றுமில்லை... மறைமூர்த்தி கண்ணா...'**

நமக்கு கால் பண்றவங்களுக்கு எடுத்த எடுப்பிலே நல்ல மெஸேஜ் கிடைக்குது. அவங்க நல்ல அபிப்ராயத்தோடு பேச ஆரம்பிப்பாங்க. நம்மளைப் பத்தி நல்ல எண்ணமும் உருவாகும்.



**'இந்தக் கோட்டத் தாண்டி நீயும் வரக்கூடாது; நானும் வரமாட்டேன். பேச்சு பேச்சாத்தான் இருக்கணும்...'**

"போன்ல கலாய்க்கிற ப்ரெண்ட்ஸுங்க, இதப் புரிஞ்சுக்கிட்டு நக்குப்பித்துன்னு உளறாம கரெக்ட்டா பேசணும். அதோடு நம்மகிட்ட தொடர்பு கொள்றவங்களுக்குச் சிரிப்பும் வரணும். அதான், வடிவேலு டயலாக்காவே வச்சருக்கேன்.





● மிருதுளா

'வசீகரா... உன் நெஞ்சினிக்க..'

சந்தியமா என் பாய் ப்ரெண்ட் லுக்காக வைக்கலப்பா. இந்தப் பாட்டைக் கேட்கறப்போ, என் தோழிங்க எல்லாம் யாருக்குடி இந்த ட்யூன்னு செமையா கலாய்க்கறாங்க. அதுவே ரொம்ப ஜாலியா இருக்கு சார்.

'அச்சம் என்பது மடமையடா
அஞ்சாமை திராவிடர் உடமையடா'

அச்சப்படறவங்களப் பார்த்தா எனக்குச் சிரிப்பாக இருக்கும். தவறு செய்யறவங்க பயப்படணும். நேர்மையாக இருக்கறவங்க பயப்பட வேண்டியதில்லை. இந்த ட்யூனைக் கேட்கறவங்களுக்கு அச்சம் விலகணும். போராடணும்ங்கற எண்ணம் வரணும்.



● ஜெகன்

'புத்தியுள்ள மனிதரெல்லாம்
வெற்றி காண்பதில்லை...
வெற்றி பெற்ற மனிதரெல்லாம்
புத்திசாலியில்லை'

வாழ்க்கையில வெற்றிபெற பலம், திறமை, அறிவு மட்டும் போதாது. இவற்றைத்தாண்டி வேறொரு விஷயம் தேவையிருக்கு என்பதை உணர்த்துற பாட்டு! சரியான வாழ்க்கைத் தத்துவம்.

– சிவக்குமார்

படங்கள் : ஸ்ரீஹரி



● சஜித்

'கண்ணதாசன் காரைக்குடி
பேரைச் சொல்லி ஊத்திக்குடி'

இத மொதல்ல கேட்கறப்போ, ஏதோ 'அலம்பல்' பாட்டு மாதிரி தோணும். அடுத்தடுத்த வரியில, 'மது' உடம்புக்கு எவ்வளவு கெடுதல்ங்கற விஷயத்தை உணர்த்தற மாதிரி இருக்கு. என் ப்ரெண்ட்ஸுக்கு நான் தர்ற 'மது' எச்சரிக்கை இந்தப் பாட்டு.



● மௌனிகா

ரிங்இனிது டோன்இனிது என்பர் காதல்மொழி
ரிங்காரம் கேளாதவர்!



அறிவியலுக்கும் மதத்துக்கும் இடையே நடக்கும் விவாதப் போருக்குத் தமது கல்லறையில் இருந்தபடியே பதில் அனுப்பியிருக்கிறார் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன். தாம் யார் பக்கம் என்பதையும் அழுத்தம் திருத்தமாகத் தெரிவித்திருக்கிறார்.

கடவுள் உண்டா இல்லையா என்னும் கேள்விக்கு, ஐன்ஸ்டைன் இதற்கு முன்னால் தெளிவாக பதில் அளித்திருக்கவில்லை. வெண்டைக்காய் போல் கொழகொழ என்று சில வாசகங்களை ஒன்றிரண்டு முறை உதிர்த்ததோடு சரி. அவற்றில் இருந்த ஒவ்வொரு வார்த்தையையும் தனித் தனியே பிரித்தெடுத்துக்கொண்டு, எனக்கு உனக்கு என்று இரு தரப்பினரும் சண்டை போடுவது வழக்கம்.

சார்பியல் தத்துவத்தை முன் வைத்தவர்; புரட்சிகர விஞ்ஞானி; இயற்பியல் நிபுணர்; ஐன்ஸ்டைனால் நிச்சயம் கடவுளை ஏற்றுக் கொள்ள முடியாது. எதையும் அறிவியல் கண் கொண்டு பார்க்கும் ஒருவரால், எப்படி கடவுளின் மீது நம்பிக்கை கொள்ள முடியும்? ஆகவே, ஐன்ஸ்டைன் ஒரு நாத்திக வாதி- இது ஒரு சாராரின் கருத்து.



இரண்டாவது பிரிவினர், ஐன்ஸ்டைனை வேறு காரணங்களுக்காகத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடிக்கொண்டிருந்தார்கள். அவர் முன்வைத்தது சாதாரண ஆன்மிகத்தை அல்ல. ஐன்ஸ்டைனின் நம்பிக்கை அனைத்தையும் தாண்டிப் புனிதமானது. இயற்கையின் அதிசயத்தை, இயற்கையின் ஒழுங்கை அவர் பலமுறை வியந்திருக்கிறார். கடவுள் ஓர் அதி மகாபுத்திசாலி. இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தவர் அவரே. இதை ஐன்ஸ்டைன் சூசகமாக நமக்கு உணர்த்தியிருக்கிறார். எங்கே காட்டு என்றால், முந்தைய பிரிவினர் சுட்டிக் காட்டும் அதே வாக்கியத்தை இவர்களும் காட்டுவார்கள்.

ஐன்ஸ்டைனின் ஒரே ஒரு கடிதம், அத்தனை குழப்பங்களுக்கும் பதில் அளித்திருக்கிறது. எரிக் குத்கிண்ட் (Eric Gutkind) என்பவர் ஒருமுறை தமது புத்தகத்தை ஐன்ஸ்டைனுக்கு அனுப்பி வைத்திருக்கிறார். பைபிளின் அவசியத்தையும் இன்றைய காலகட்டத்துக்கு பைபிள் ஏன் தேவை என்பதையும் வலியுறுத்தி எழுதப்பட்ட புத்தகம் அது. எரிக், தத்துவங்களில் தோய்ந்தவர். தவிரவும், எழுத்தாளர்.

என்ன நினைத்தாரோ தெரியவில்லை,

# கடவுள் பேச்சுக் கா!

**மருதன்**

புத்தகத்தைப் படித்து முடித்த கையோடு கடச்கட எரிக்குக்கு ஒரு கடிதத்தை எழுதிவிட்டார் ஐன்ஸ்டீன். ஜனவரி 3, 1954ல் எழுதப்பட்ட கடிதம் அது. எழுதப்பட்டு ஐம்பது ஆண்டுகளுக்கும் மேல் ஆனபிறகு, சென்ற வாரம் முதன் முறையாக இந்தக் கடிதத்தை ஏலம் விட்டிருக்கிறார்கள். நான்காயிரம் லட்சம் டாலருக்கு மேல் கொடுத்து யாரோ வாங்கிச் சென்றிருக்கிறார்கள்! அது நமக்கு முக்கியமல்ல.

நமக்குத் தேவை கடிதத்தின் சாரம். ஐன்ஸ்டீன் யூத மதத்தைச் சேர்ந்தவர். யூத மதம் பற்றி அவர் என்ன சொல்கிறார்? 'யூதர்கள் மற்ற மக்களைப் போன்றவர்கள் தாம். அவர்களிடம் எந்தவித விசேஷ குணாதிசயங்களையும் என்னால் காண முடியவில்லை. நாங்கள் கடவுளின் குழந்தைகள் என்றெல்லாம் அவர்கள் பெருமிதத்துடன் சொல்லிக்கொள்வதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. பிற மதங்களைப் போலவே யூத மதமும் மூட நம்பிக்கைகளால் கட்டமைக்கப்பட்டிருக்கிறது.'

நம் காலப் பிரச்னைகளுக்கு பைபிளில் தீர்வு உண்டு என்கிற வாதத்தையும் ஐன்ஸ்டீன் ஏற்றுக்கொள்ளவில்லை. அவரைப் பொருத்தவரை பைபிள் அழகான கதைகள் அடங்கிய மிகப் பழமையான படைப்பு. மிகவும் குழந்தைத்தனமானதும்கூட...

உலகையும் மனித குலத்தையும் தாவரங்களையும் விலங்குகளையும் ஒளியையும் பிறவற்றையும் தினம் ஒன்றாக கடவுள் உருவாக்கினார் என்னும் பைபிள் செய்தியை, ஐன்ஸ்டீன் ஒரு சிறிய புன்னகையுடன் கடந்து செல்கிறார். சடங்குகளையும் வழிபாடுகளையும் மறுபிறப்பு நம்பிக்கையையும் அவர் நிராகரிக்கிறார்.

ஐன்ஸ்டீன் தமது நம்பிக்கையை (அல்லது நம்பிக்கையின்மையை) இவ்வாறு பதிவு செய்கிறார்: 'கடவுளை உருவாக்கியவன் மனிதன். உருவாக்கியதன் காரணம், அவனது பலவீனம். கடவுளைப் பற்றி எத்தனை விதமான கருத்துகளை நீங்கள் கூறினாலும் சரி. எத்தனை நுட்பமாக விளக்கினாலும் சரி. என்னால் அவற்றை ஏற்றுக்கொள்ள முடியாது.'

சிறு வயதில் ஐன்ஸ்டீன் படித்தது கத்தோலிக்கப் பள்ளியில். சடங்குகளில் நம்பிக்கை உள்ளவராக இருந்திருக்கிறார். 'அச்சச்சோ கடவுள் கண்ணைக் குத்தும்' என்று பயந்து நடுங்கியிருக்கிறார். எல்லாம் பன்னிரண்டு வயது வரைக்கும்தான். பிறகு கடவுளிடம் 'கா' விட்டுவிட்டார் ஐன்ஸ்டீன். அதற்குப் பிறகு எந்தச் சந்தர்ப்பத்திலும் அவர் பழம் விடவில்லை.

பொன்ராஜ், நிதானமாக அந்தப் 'படங்களை' எடுத்து, டிராவில் போட்டார். குணசேகரைப் பார்த்தார்.

''கோவத்துல, கோகிலாவை ஒண்ணும் பண்ணிடாதே. அவங்க குடும்பம் எதற்கும் துணிஞ்சது. பொறுத்துதான் போகணும். உன் மனைவிக்கு நல்ல புத்தி சொல்லி இருத்தப் பார்... போ...''




# புள்ளிகள்... கோலங்கள்...

''அவன் இருக்க மாட்டான்ணே! கெட்ட புத்தி அவன் ரத்தத்துலயே ஊறி இருக்குண்ணே! அவள் செஞ்ச காரியத்துக்குச் சும்மா விடக்கூடாதுண்ணே! அவ முகத்துல இனி நான் விழிக்கவே கூடாதுண்ணே... அவள் இங்கே இருக்கவே கூடாது...''

''குணா...''

''மன்னிச்சுடுங்கண்ணே! இந்த ஒரு விஷயத்துல என்னைத் தடுக்காதீங்க...'' என்று சொல்லி

**படுதலம் சுகுமாரன்**

விட்டு 'விடுவிடு'வென்று வெளியேறினான் குணசேகர்.

பெட்டியுடன் வந்து இறங்கும் மகளை நெற்றி சுருக்கிப் பார்த்தார், தர்மலிங்கம்.

''வாம்மா கோகிலா... என்ன நீ மட்டும் தனியா வர்ற?''

''நானா வரலைப்பா... துரத்திட்டாங்க...''

''என்னம்மா சொல்ற...?''

''நீங்க கொடுத்த யோசனை, எனக்கெதிராய்த் திரும்பிட்டுதுப்பா...'' என்று கதறினாள்.

''இதுல நம்ம தப்பு என்னம்மா இருக்கு? தப்பு செஞ்சது அவங்க வீட்டுப் பொண்ணு. அவளைல்ல வீட்டை விட்டுத் துரத்தணும். அதை விட்டுட்டு, உன்னைத் துரத்தறாங்கன்னா என்ன அர்த்தம்? நான் பார்த்துக்கிட்டு சும்மாயிருந்துடுவேனா...?''

''ஒண்ணும் செய்ய முடியாதுப்பா. அண்ணன் மேல கண்மூடித்தனமான விசுவாசம். அவரை எந்த வகையிலும் பிரிக்க கூட்டிக்கிட்டு வரமுடியாது...''

''அண்ணனைத் தீர்த்துட்டால்?''

''அப்பா...''

''பொன்ராஜ் குடும்பம் திருநெல்வேலிக் கோணில, முட்டுச் சந்துல குடியிருந்த காலத்துலருந்து எனக்கு அவங்களைத் தெரியும்மா. எட்டணாவுக்குக் கடலை வாங்கி, எட்டு பங்கு வெச்சுத் தின்னவங்கம்மா. குருட்டு அதிர்ஷ்டம், மேல வந்துட்டாங்க. சம்பந்தியான பிறகும், அவங்க என்னைக் கிட்ட சேர்க்காம அலட்சியப்படுத்தினாங்க. 'உறவு வேற, தொழில் வேற'ன்னு ஒதுக்கி என்னை அவமானப்படுத்தினாங்க. பெருந்தன்மையா பொறுத்துக்கிட்டேன். இன்னைக்கு, உன்னை விரட்டியடிச்சதன் மூலம் என் மகளை நோகடிச்சவங்க சம்பாதிக்கக் கிட்டாங்க. இதுக்குச் சரியான பாடம் கத்துக் கொடுக்கலேன்னா... நான் தர்மலிங்கம் இல்லே...'' என்று விழிகளை உருட்டி, மீசையை முறுக்கினார் தர்மலிங்கம்.

(தொடரும்)

● எம்.அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி

***நீங்கள் திடீரென்று ஊமையாகி விட்டால் என்ன செய்வீர்கள்?***

போனால் போகிறதென்று, பேசாமல் இருந்துவிடுவேன்!

● ஜே.துரைராஜ், சென்னை

***ஐ.பி.எல். 20-20 கிரிக்கெட் ஆட்டத்துக்குக் கவர்ச்சி நடனம் தேவையா..?***

ஆள் பாதி ஆடை பாதி என்பார்கள். 50-50 ஆட்டம் 20-20 என்று ஆனதில், ஆட்டமும் பாதியாச்சு; ஆட்டமாடும் பெண்களின் ஆடையும் பாதியாச்சு. கிரிக்கெட்டில் over குறைந்தது என்றால், இந்த கவர்ச்சி நடனம் sorry கொஞ்சம் over ஆகிவிட்டது. கிரிக்கெட் பாஷையில் சொல்லப் போனால், இது extra-coverச்சு!

● கே.கே.வெங்கடேசன், வேலூர்

***அறிவாளி, முட்டாள் என்று பார்த்தவுடன் கண்டுபிடிக்க முடியுமா?***

கஷ்டம். நிறைகுடமும் தளும்பாது; காலி குடமும் தளும்பாது!

● கே.என்.சுப்பிரமணியன்,
சென்னை

***காதலித்த பின் கைவிடல், கல்யாணம் ஆன பின் விவாகரத்து – இதில் எது சிறந்தது?***

எப்படியும் கழட்டி விட்டுவிடுவது என்று முடிவு கட்டிவிட்டீர்கள். உங்களுக்குச் சிறந்தது, மொத்தமாக எல்லாவற்றுக்கும் தலை முழுகும் 'கூதாமல் கொள் சன்யாசம்.'



# தளும்பாத

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

***திருப்தி, ஆத்ம திருப்தி என்ன வேறுபாடு?***

ஹோட்டலுக்குச் சென்று நாம் வயிறாரச் சாப்பிட்டால் திருப்தி. சாப்பிட்ட பில்லுக்கு வேறு யாராவது பணம் கொடுத்தால், ஆத்ம திருப்தி.

● அனன்யா, பெங்களூர்

***உண்மையான அன்பை எப்படிக் கண்டுகொள்வது?***

பொய்யான கோபத்தில்.

● என்.கோமதி,
நெல்லை

***சில ஆண்கள், மனைவி தரும் காஃபி அமிர்தம் போல இருப்பதாகக் கூறி அசடு வழிகிறார்களே...?***

# கிரேஸியைக் கேளுங்கள்



# காலி குடம்!

நான் முந்தி
நீ முந்தின்னு முந்தானை
டிசைன்கள்ல நாங்க
அசத்தற ரகசியம் இப்போ
புரியுதா?

அளவுக்கு மீறி அசடு வழிந்தால், அமிர்தமும் விஷமாகும்.

● ஆர்.கே. லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்

'நீங்கள் பெண்ணின் முந்தானைக்குள் ஒளிந்துகொண்டிருக்கிறீர்கள்' என்று கூறுகிறேன். நான் சொல்வது சரிதானே?

நமது வளர்ச்சியில் அக்கறை கொண்ட மனைவி சொல்லை மந்திரமாக மதித்து, அதை 'முந்தானை' (அதாவது முந்தா தவனை), 'முந்தானையில் ஒளிந்து கொண்டிருப்பவன்' என்று சொல்வதில் தவறு இருப்பதாக எனக்குத் தோணவில்லை. அது சரி, மனைவி சொல்லை முந்தும் ஆணை எதற்குள் ஒளிந்துகொண்டிருப்பதாகச் சொல்வீர்கள்?

● ரா.பிரசன்னா, மதுரை
காதல் எனப்படுவது?

'காதல் எனப்படுவது யாதெனில்
கல்யாணம்
ஆகலா வேஅறியா தல்'

● மஞ்சுளா ராஜகோபாலன், சென்னை
தமிழ்த் தாத்தா, திரு உ.வே.சாமிநாதய்யர். தமிழ் பேரன் யார்?

திரு.உ.வே.சா.வுக்கு தமிழ்த் தாத்தா என்று பேர் வைத்து அழைத்த தமிழ்ப் பேரன், திரு.கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள்.

● தி.ரங்கசாமி, ஸ்ரீரங்கம்
குரங்கிலிருந்து மனிதன் பிறந்தான் என்பதை என் மனம் நம்ப மறுக்கிறது?

மனம் ஒரு குரங்கு!

# அஞ்சல் வழியில் ஹிந்தியில் பேச பயிற்சி
# அஞ்சல் வழியில் ஆங்கிலத்தில் உரையாட பயிற்சி

அண்மையில் ஒரு அறிஞரின் சொற்பொழிவு கேட்கும் வாய்ப்பு கிடைத்தது. அவர் கூறிய பல கருத்துக்கள் வாழ்க்கையில் பின்பற்ற வேண்டியனவாக இருந்தன. அவற்றில் ஒன்று மிக மிக முக்கியமானது, கட்டாயம் பின்பற்ற வேண்டியது. அதிக அளவில் புகழ் பெற விரும்புகிறீர்களா? நிறைய சம்பாதிக்க ஆசையா? அப்படியானால் அதிக மொழிகளைக் கற்றுக்கொள்ளுங்கள். ஆம், அதிக மொழி கற்பவர்களுக்கு வாழ்க்கையில் முன்னேற அதிக வாய்ப்புகள் உள்ளன.

இப்போதெல்லாம் 25 வயதான பிள்ளைகள்கூட குறைந்த பட்சம் மாதம் 25000 ரூபாய் சம்பாதிக்கிறார்கள். படிக்கும்போதே காம்பஸ் இன்டர்வியூ மூலமாக தேர்ந்தெடுக்கப்பட்டு விடுகிறார்கள். அப்படி தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் பெரும்பாலும் குறிப்பிட்ட திறமைகளைத் தவிர, அவர்களது ஆங்கிலம் மற்றும் இந்தி மொழித் திறமையின் அடிப்படையில்தான் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். எனவே, தாய்மொழியுடன் ஆங்கிலம் மற்றும் இந்தியில் சரளமாகப் பேசுவது மிக அவசியமான தேவையாகிவிட்டது.

இவை அனைத்தையும் மனத்தில் கொண்டு பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கம் பயிற்சி மையம், பேச்சு மொழி இந்தி மற்றும் பேச்சு மொழி ஆங்கில பயிற்சிகளை அஞ்சல் வழியில் நடத்தி வருகின்றது. இந்த பயிற்சி பற்றிய மற்ற விபரங்கள் கீழ்க்கண்டவாறு கொடுக்கப்பட்டுள்ளன.

## பேச்சு மொழி இந்தி டிப்ளமா/ பேச்சு மொழி ஆங்கில டிப்ளமா

1) பயிற்சியில் மொழி ஆர்வமுடைய எவரும் சேரலாம். (பள்ளிச் சிறுவர் முதல் ரிடையர் ஆனவர் வரை)

2) பேச்சு மொழி இந்தி பயிற்சி தமிழ் மூலமாகவும், ஆங்கிலம் மூலமாகவும் நடத்தப்படுகிறது.

3) பேச்சு மொழி ஆங்கிலம் தமிழ் மூலமாகவும், ஹிந்தி மூலமாகவும் நடத்தப்படுகிறது.

4) அஞ்சல் வழியில் நடத்தப்படுவதால் எங்கிருந்தபடியும் சுலபமாகப் படிக்கலாம்.

5) இரு வழித் தொடர்பு (Two Way Communication) இப்பயிற்சியில் சிறப்பு அம்சமாகும். அதாவது ஒவ்வொரு மாதமும் முதல் வாரத்தில் பாடங்கள் கூரியர்/post மூலம் அனுப்பப்படும். ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பயிற்சிகள் இருக்கும். இப்பயிற்சிகளைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். இவற்றைத் திருத்தி, பயிலுபவர்களுக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்படும்.

6) சென்னையில் ஐந்து நேர்முக வகுப்புகள் (சனி அல்லது ஞாயிற்றுக்கிழமைகளில்) நடத்தப்படுகின்றன. தவிர திருச்சி, மதுரை, கோயம்புத்தூர், தஞ்சை ஆகிய ஒவ்வொரு இடங்களிலும் முறையே இரண்டு வகுப்புகள் நடத்தப்படுகின்றன. தவிர தேவைக்கேற்ப மற்ற இடங்களிலும் நடத்தப்படுகின்றன. இவ்வகுப்புகளில் அந்த மாதம் அனுப்பிய பாடங்கள் விளக்கப்படுவதுடன் இந்தி மற்றும் ஆங்கில மொழியில் உரையாட (மதிய உணவுடன்) காலை 10.00 மணி முதல் மாலை 5.00 மணி வரை பயிற்சியும் அளிக்கப்படுகின்றது.

7) நேர்முக வகுப்புகளுக்கு வர முடியாதவர்களுக்கு உதவியாக (மொழி விளக்க மேம்பாட்டு மையங்கள்) திருச்சி, கோவை, மதுரை, தில்லி, ஹைதராபாத், மும்பை, ராஜஸ்தான், தஞ்சாவூர் போன்ற இடங்களில் உள்ளன. தவிர, 15 போர்களுக்கு அதிகமான எண்ணிக்கையில் மாணவர்கள் உள்ள இடங்களில் மொழி விளக்க நிபுணர்கள் உள்ளனர்.

8) பேச்சு மொழி ஹிந்தி ஒலி நாடாக்கள்: அகர உச்சரிப்பிலிருந்து பலவகை சூழ்நிலை களில் பேசும் பயிற்சிகளைக் கொண்ட இரட்டை ஒலி நாடாக்கள் (Twin Cassettes) வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுடன் வழங் கப்படும் துணை நூலைப் படித்த வண்ணம், பட்டமளிப்பு விழாக்கள் ஒவ்வொரு வருடமும் நடத்தப்படுகின்றன.

11) பயிற்சிக் காலம் ஆறுமாதம் (ஜனவரி முதல் ஜூன் வரை, ஜூலை முதல் டிசம்பர் வரை) அடுத்த வகுப்பு ஜூலை 2008ல் துவங்க உள்ளது.



* பத்தாவது பட்டமளிப்பு விழாவின்போது எடுத்த புகைப்படம்

ஒலிநாடாக்களைக் கேட்டால் மிக விரைவில் மொழியைக் கற்றுக் கொள்ளலாம். (விலை 150 ரூபாய்)

9) பேச்சு மொழி ஆங்கிலம் பாடம் சார்ந்த ஒலி குறுந்தகடுகள் (audio CDs) தயாராக உள்ளன. இந்த CD மூலமாக ஆங்கில உச் சரிப்பு, இலக்கணம், சூழ்நிலைப் பேச்சு வார்த்தைகள் ஆகியவற்றைக் கற்கலாம். (விலை 150 ரூபாய்)

இந்த ஒலிநாடாக்களையோ (CD)யையோ பெற விரும்புபவர்கள் ஒவ்வொன்றுக்கும் ரூபாய் 150க்கான டிமாண்ட் டிராப்ட் (SBIOA Institute, Chennai என்ற பெயருக்கு எடுத்து அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

10) பயிற்சியில் தேறியவர்களுக்கு 'Diploma in Conversational Hindi/Diploma in Conversational English' சான்றிதழ்கள் வழங்கப்படு கின்றன. சான்றிதழ் வழங்குவதற்காக

12) பயிற்சிக் கட்டணம் ரூ 700/- (ரூபாய் எழுநூறு மட்டுமே) (நேர்முகப் பயிற்சி, தேர்வுக்கட்டணம் உட்பட)

ஜூலை 2008ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் டிமாண்ட் டிராப்ட் அல்லது உள்ளூர் காசோலை (Rs.100) SBIOA Institute, Chennai என்ற பெயரில் எடுத்து சுய விலாசமிட்ட ரூ.10க்கான தபால் தலையுடன் கூடிய உறையில் கீழ்கண்ட முகவரிக்கு எழுதவும். தபால் தலைகளை ஒட்டாமல் உறையினுள் வைத்து அனுப்ப வேண்டும் (ஒவ்வொரு பயிற்சிக்கும் தனியாக ரூ.100 அனுப்ப வேண்டும்). உறையின் மேல் பேச்சு மொழி ஹிந்தி அல்லது பேச்சு மொழி ஆங்கிலம் மற்றும் பயிற்று மொழியைக் குறிப்பிட வேண்டும். (இந்த ரூபாய் 100/- பயிற்சிக் கட்டணத்திலிருந்து கழித்துக் கொள்ளப்படும்.)

---

**The Executive Director, SBIOA Institute,**

229, N.S.C.Bose Road, P.B.No.1279,

Chennai 600 001. Phone No: 044 - 25340226

Fax No: 044 - 25261013




# கல்கி



2008 ஜூன் 1
ஸர்வதாரி வைகாசி 19
மலர் : 66
இதழ் : 44


தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## ஈடு செய்ய முடியாத இழப்பு!

ஓசூரில் மட்டுமின்றி பெங்களூருவிலும் கள்ளச் சாராய மரணங்கள் நிகழ்ந்துள்ளன. இரு இடங்களிலும் ஒரே சாராயம்தான் விற்கப்பட்டுள்ளது என்றும், இதில் ஏதோ சதி இருப்பதாகவும் காவல் துறையினர் கருதுகின்றனர். விசாரணையை இந்த அடிப்படையில்தான் கர்நாடகா போலீஸ் அணுகுகிறது. தமிழக போலீஸோ, சம்பவத்துக்குப் பின் விழித்துக்கொண்டு ரெய்டுகளில் இறங்கியிருக்கிறது! காவல் துறையின் முயற்சிகளை மீறியோ அல்லது முயற்சியின்மை காரணமாகவோ கள்ளச்சாராயப் பெருக்கு தொடர்ந்துகொண்டேதான் இருக்கிறது; மரணங்களும் நின்ற பாடில்லை!

போதையில் மூழ்கி, தப்பித்தலை நாடுவது மனித பலவீனம். இதிலிருந்து மக்களைக் காக்க வேண்டும் என்பதற்காகத்தான் சுதந்திரப் போராட்ட காலத்துத் தலைவர்கள், கள், மது ஒழிப்பைத் தங்கள் செயல்திட்டத்தின் ஓர் அங்கமாகக் கொண்டிருந்தனர். கள்ளுக்கடை மறியலின்போது தடியடிபட்டதையும் பொருட்படுத்தாமல், மதுவை எதிர்த்துப் பிரசாரம் செய்தனர்.

ஆனால், இன்றைய இந்தியாவில், தலைவர்கள் மதுவிலக்கு கொள்கையில் நம்பிக்கையற்றவர்களாகிவிட்டனர். இன்னும் கேவலம், தமிழகத்தில் அரசே மது விற்பனை நிலையங்கள்

அவர் கஜானாவுக்கு சம்பாரிச்சுத் தருவாரு... நான் உன்னை கவனிச்சுக்குறேன்
மது அரக்கன்
கள்ளச்சாராய அரக்கன்




நடத்தி, மக்களின் பலவீனத்தை வருவாயாக்கிக்கொள்கிறது!

கள்ளச் சாராயத்தின் கலவை தப்பாகும்போது, உடனடி மரணம் நிகழ்கிறது. இந்தச் சோகம் நிகழாதபோதும் கள்ளச் சாராயத்தில் உள்ள நச்சுத்தன்மை, அருந்துபவனைச் சிறிது சிறிதாக அழிக்க வல்லது; மெள்ள மெள்ள புலன்களை மழுங்கடித்து, அறிவைச் சிதைக்க வல்லது; உடல் உறுப்புகளைச் சேதமுறச் செய்யக் கூடியது. நல்ல சாராயம் (டாஸ்மாக் ரகம்) கூட இதே பாதிப்புகளைத்தான் ஏற்படுத்துகிறது. சிறிது கூடுதலான காலம் ஆகலாம் என்பது மட்டுமே வித்தியாசம்.

ஒரு மனிதன் மதுவால் அழியும்போது, அவன் குடும்பமும் அவன் சார்ந்துள்ள சூழலும் சமுதாயமும், பொருளாதார ரீதியிலும் மன ரீதியிலும் மீளமுடியாத சேதத்தை அடைகின்றன.

'கள்ளச் சாராயத்தை ஒழிப்பதற்காகத்தான், மதுக்கடைகளைத் திறந்து வைக்கிறோம்' என்கிற வாதம், மக்களுக்கு இழைக்கப்படும் அபவாதம். இந்த நோக்கம் வெற்றி பெறாது என்பது, ஒசூர் - பெங்களூரு மரணங்கள் மூலம் மீண்டும் நிரூபணமாகியுள்ளது.

மது விற்பனையில் ஈடுபடும் அரசு, மது அருந்துதலை எதிர்த்துப் பிரசாரம் செய்வதற்கான தார்மிக பலத்தை இழக்கிறது. அவ்வரசின் கட்டுப்பாட்டிலுள்ள காவல் துறையும் கள்ளச்சாராயத்தை ஒழிக்கும் பணியில் முரண்பட்ட கொள்கைச் சூழலில் இயங்க வேண்டியுள்ளது. அதனால் கள்ளச் சாராயத்துடன் லஞ்ச-ஊழலும் பெருக்கெடுக்கிறது. போலீஸாரே கள்ளச்சாராய 'டெண்டர்' எடுக்கும் அவலம்கூட நிகழ்கிறது!

'காலத்துக்கு ஏற்ற சிந்தனை அல்ல' என்று ஒதுக்கிவிடாமல், பூரண மது விலக்கை அமல்படுத்துவதே நல்ல தீர்வாகும். மனித வளத்தைச் சீர்குலைத்தும் அழித்தும் பெறுகிற வருவாய், லாபமல்ல; ஈடு செய்ய முடியாத இழப்பு! ●

# வட்டமேஜை



'**ஊ**ர்ல கஷ்டப்படற மக்கள சென்னைக்கு வர வழைச்சு வயிறார ஒரு வேளையாவது சாப்பிட வைக்கணும்' என்ற கஞ்சா கருப்புவின் ஆசை, மிகவும் சிறப்பு!

- வே.ந.கதிர்வேல், வேலூர்

# சிறப்பான ஆசை!

'**கு**ருவி' பட விமர்சனம் நச். விஜய் படம் என்பதற்காக ஆஹா, ஓஹோ எனப் பாராட்டாமல், பாராட்ட வேண்டிய இடங்களில் பாராட்டி, குட்ட வேண்டிய இடங்களில் நன்றாய் குட்டி விட்டீரே!

- என்.காளிதாஸ், சிதம்பரம்

**கை**திகளின் காய்கறித் தோட்டம் அருமையான முயற்சி! திருச்சியோடு நின்றுவிடாமல் நாடெங்குமுள்ள சிறைகளிலும் நடைமுறைப்படுத்தலாம்.

- எஸ்.சங்கர், திருப்பரங்குன்றம்

'**ஒ**ற்றை ரோஜா'வில் வரும் மதுரை ரயில் நிலைய காட்சி, 'கல்கி' அன்று சொன்ன மக்களின் அணிவகுப்பு, இன்றும் அப்படியே இருப்பது ஆச்சரியம்தான்.

- ஆர்.பழனிக்குமார் மதுரை

**க**ல்கியின் மின்னல் கதைகள் அறிவுபூர்வமிக்கதாய் சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்திருந்தன.

- என்.பாலசுப்பிரமணியன், சென்னை

**டி**..ஆர். பாலுவுக்கு எதிரான குற்றச்சாட்டுகளை விசாரிக்க வேண்டியவர்களே கண், காது, வாய் பொத்தி இருக்கும் கார்ட்டூன் நூறு தலையங்கங்களுக்குச் சமம். உண்மை வெளியில் கசியும்போது, கப்பல் தரை தட்டும் என்பது கூடவா இவர்களுக்குத் தெரியாது.

- எல்.மாறன், மேல்பட்டி

**ஐ**.பி.எல். பற்றி பெஸ்ட் கமென்ட் அடித்துள்ளார் கிரேஸி.

- ராஜிராதா, பெங்களூரு

'**பு**கைத்தல் காட்சிகள்' பற்றி தங்கள் கருத்தை வெளியிட்ட தலையங்கம் அருமை.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

**உ**தயநிதி அளித்த பேட்டி, ஒரு மந்திரிகுமாரனின் பேட்டியாக இல்லாமல், ஒரு தயாரிப்பாளரின் பேட்டியாகச் சுவைபட இருந்தது.

- த.சத்தியநாராயணன், அயன்புரம்

மே.25 தலையங்கம் படித்தேன். லஞ்ச ஊழலில் ஈடுபடும் அரசியல்வாதிகள், அதிகாரிகளுக்குச் சரியான சாட்டை அடி!

- த.புகழேந்தி, கூகூர்

போஸ்ட்

# பெரியவீடு

கே. கீதா



**கா**லிங் பெல் ஒலிக்க ஜெயந்தி கதவைத் திறந்தாள்.

''ஹை... அப்பா''- ஜெயந்தி கத்தியே விட்டாள்.

''ஷ்ஷூ... என்ன நீ சின்னக் குழந்தையா... ம்?'' மகளைக் கண்டித்தபடி உள்ளே வந்தார் பகவதி! கை நிறைய பழங்கள்.

''வாங்க மாமா...'' கைலியுடன் ராமு தன் மாமனாரை வரவேற்றான். கூடவே, ''ஊர்ல அத்தை சௌக்யமா?'' அன்போடு விசாரித்தான்.

''எல்லாரும் சௌக்யம் மாப்ள... இங்க ஒரு வேலை விஷயமா என் நண்பனோட வந்தேன். அப்படியே உங்களைப் பாக்கணும்னு தோணிச்சு. ஒண்ணும் இடஞ்சல் இல்லியே?'' பணிவாகக் கேட்டார். காரணம், ஜெயா-ராமு கல்யாணம் முடிந்து இரண்டு மாதங்களே ஆகியிருந்தன.

''என்ன மாமா பேசறீங்க... எது இடஞ்சல்...? சரி... ஜெயா, உடனே உங்கப்பாவுக்குச் சாப்பாடு ரெடிபண்ணு...''

''மாப்ள! ஒண்ணும் வேணாம்... பஸ் ஸ்டாப்ல அந்த நண்பர் வெய்ட் பண்ணிக்கிட்டிருக்காரு. சாப்பாடும் ஆயாச்சு... கடைசி பஸ்ல டிக்கட்டும் வாங்கச் சொல்லிட்டேன். ஒரு பத்து நிமிஷம் பேசிட்டு பொறப்படறேன்...!''

''என்ன மாமா நீங்க? மூணாவது மனுஷன் மாதிரி பேசறீங்க... இப்ப மணி ராத்திரி ஒம்பதாவுது! தங்க மாட்டேன்னு அடம்பிடிக்கறீங்க. எனக்குப் புரியலயே? ஜெயா... உன் அப்பாகிட்ட நீயே பேசு!''

''என்னப்பா... அந்த நண்பரையும் கூட்டிக்கிட்டு வரவேண்டியதுதானே?'' ஜெயந்தி சோகமாகக் கேட்டாள்.

''அட... நீ என்னம்மா? என்னை ரொம்ப உபசாரம் பண்ணிக்கிட்டு... ம்... நான் இப்ப விருந்தாளிம்மா! அந்த அளவு என்னைக் கவனிச்சா போதும். நீயும் மாப்ளயும் நல்லா ஒருத்தர ஒருத்தர் புரிஞ்சுக்கிட்டு, சந்தோஷமா வாழணும்... நான் சின்னக் குழந்தையா? இதோ பஸ் ஏறினா மூணு மணி நேரம். வீட்டுக்குப் போய்டுவேன்! சரி இப்படி உக்காரு! கொஞ்ச நேரம் பேசலாம்!''

மகளும், மருமகனும் எவ்வளவோ வற்புறுத்தியும் அங்கு தங்காது ஊருக்குக் கிளம்பினார் பகவதி.

அவர் சென்ற பிறகு ரவி, ஜெயந்தியிடம், ''உங்கப்பா ஜென்டில்மேன்! இந்தச் சின்ன இடத்துல நமக்குத் தொந்தரவா இருக்கக் கூடாதுன்னு, நாகரிகமா கௌம்பிட்டாரு... மொதல்ல ஒரு பெரிய வீடு பாக்கணும்...!''

அதே நேரம் அந்தச் சுமாரான நகரத்தின் பஸ் ஸ்டாண்டில் பகவதி ஒரு கடைக்காரரிடம் கேட்டார்...

''ஏங்க இளியனூருக்கு லாஸ்ட் பஸ் எப்ப வரும்?''

# காதல் கவுன்சலிங்!

தமிழ் சினிமாவின் லேட்டஸ்ட் சூப்பர் ஹிட் ஜோடி ஜெனிலியா - ஜெயம் ரவி. 'சந்தோஷ் சுப்ரமணியம்' சொல்லி அடித்த கில்லியில் இரு வரும் ரசிகர்களிடையே இமயம் ரேஞ்சுக்கு உயர்ந்துவிட, அவர்களை அப்படியே அள்ளிக் கொண்டு வந்து ஒருவருக்கொருவர் கலாய்க்கச் சொன்னபோது, சந்தோஷ தெறிப்பு கள் பூத்தன!

''என்ன ஜெனி, தமிழ் ரசிகர் களுக்கு உம்மேல செம க்ரேஸ் போல...''

''எல்லாம் உங்க அண்ணன் ராஜா வுக்குத்தான் நன்றி சொல்லணும் ரவி. இப்படியொரு லைஃப் டைம் கேரக்டரை எனக்குத் தந்து பரவசத் தோட உச்சியில என்னைக் குளிர் காய வைச்சுட்டார். சரி, எனக்கு இவ்ளோ பேர் கிடைக்கும்னு தெரிஞ்சும், இந்தப் படம் பண்ண நீ எப்படி ஒத்துக்கிட்ட? உன்னை சைடுக்குத் தள்ளிடுவேன்னு பயப் படலியா...?''

''நீ படத்துல எல்லாத்தையும் எதுக்காக, யாருக்காக பண்ற? காத லுக்காக, சந்தோஷுக்காகத்தானே! அப்ப அவன்தானே முக்கியம். அதுவுமில்லாம நீ படம் முழுக்கப் புகுந்து விளையாடினாலும் க்ளை மாக்ஸ்ல அப்பாகிட்ட நான் பேசற சீன்ல உன்னையும்கூடத் தூக்கிச் சாப்பிடலாம்னு நினைச்சேன். எஸ், கடைசில அதுதானே நடந்தது.''

''ரொம்ப ஓவரா ஆடாத. உங்க ஃபேமிலியும் 'சந்தோஷ்' கதைல வர்ற ஃபேமிலி மாதிரிதான்னு கேள்விப்பட் டேன். அதனாலதானே நீ அவ்ளோ சுச் சிதமா நடிச்ச?''

''சரிதான்! அண்ணன், அண்ணி, அப்பா, அம்மான்னு எல்லாருமே என் மேல பாசம் வெச்சுக் கைப்பிடிச்சு அழைச்சுட்டுப் போய் வாழ்க்கையோட அர்த்தத்தைப் புரிய வைக்கிறாங்க. ஆனா படத்துல வர்ற மாதிரி இல்ல. என் அப்பா எனக்கு முழு சுதந்திரம் கொடுத்திருக்கார். காதல் பத்தி என்னளவுல எனக்கு ஒரு வரையறை இருக்கு. லைஃப். நீ அதை எப்படிப் பார்க்கற ரவி?''

''தன்னைத்தானே அழகாக்கிக்க, ஒவ் வொரு மனுஷனும் மொதல்ல தன் மேலயே காதல் வயப்படணும். அப்ப ஆட்டோமேட்டிக்கா அவன் எங்கயாவது லாக் ஆயிடுவான். அந்த வகையில



பார்க்கும்போது, காதலை ஒரு மகத்தான சக்தியாத்தான் நான் பார்க்கறேன். அந்த உணர்வு அழகானது ஜெனி. நீ யாரையாச்சும் லவ் பண்ணியிருக்கியா?''

''காதல், அழகான உணர்வு மட்டுமில்ல; இப்ப இருக்கிற சாதிச் சண்டை பூசல்களுக்கு ரொம்ப அற்புதமான மருந்தும்கூட. ஆனா, என் விஷயத்துல இன்னும் அது கண்ணாமூச்சிதான் நடத்திட்டிருக்கு. பாரேன், பக்கத்துலயே நீ இருக்க... உன்னை ஜஸ்ட் ஃப்ரெண்டாத்தான் பார்க்கத் தோணுது. எப்ப, யார் மேல என் காதல் அம்பு பாயும்னு எனக்கே தெரியல. அதே நேரத்துல பாயாமலேகூட போகலாம். அதுவும்கூட தப்பு கிடையாது!''

''ரொம்பச் சரியா சொன்ன ஜெனி. எனக்கும் இப்படித்தான். என்ன பண்றது, வீட்ல பார்க்கற பொண்ணைத்தான் காதலிக்கணும் போல!''

''ஒரு வேளை உனக்குக் காதல் வந்தா என்ன பண்ணுவ ரவி?''

''நீ என்ன பண்ணுவ?''

''அதுக்கு உண்மையா இருக்கணும். மொதல்ல எது காதல், அதுக்கு நாம தகுதியானவளான்னு பார்க்கணும். பீச்சக்குப் போய் சுண்டல் சாப்பிடறதோ, கோயிலுக்குப் போய் கடலை போடறதோ இல்ல காதல். ஆத்மார்த்தமானது; நூறு சதவிகித நம்பிக்கை வைக்கணும். இவன்தான் நம்ம வாழ்க்கைத் துணைன்னு உறுதியா இருக்கணும். சரியான சந்தர்ப்பத்துல வீட்டுக்குத் தெரியப்படுத்தணும். எதையும் ஃபேஸ் பண்ண தைரியம் இருக்கணும். ஒத்துக்கலைன்னாலும் போராடி ஜெயிக்கணும். ஆனா, அதைப் பந்தயமா பார்க்கக் கூடாது. முக்கியமா, காதலால யாரையும் காயப்படுத்தக் கூடாது. கண்ணியமா நடந்துக்கணும். தியேட்டர் கார்னர் சீட்களிலிருந்தாலும், தாக்கி எறிஞ்சிட்டுக் கழுத்துல தாலி ஏறினாத்தான் எல்லாம்னு உறுதியா இருக்கணும்.''



''வெல் செட்! போற போக்கைப் பாத்தா நீ காதல் கவுன்சலிங் சர்வீஸ் ஆரம்பிச்சுடுவே போலிருக்கே!''

''லேய்! நல்ல விஷயம் சொன்னா, நக்கலா!''

''இல்லப்பா, சந்தோஷ் சுப்ரமணியத்துல அவ்ளோ ஃபீல் பண்ண வைச்சிட்டேன்னு சொல்ல வந்தேன். ஆமா தமிழ்ல ஏன் உன்னை அதிகமா பார்க்க முடியல?''

''நல்ல படங்கள் மட்டும்தான் ஒப்புக்கிறேன். இதுக்கு முன்னாடி நான் நடிச்ச சில படங்கள், சரியா போகல. அதுக்கும் இதுக்கும் முடிச்சுப் போட்டுப் பார்த்திருக்கலாம். ஆனா சந்தோஷ் ஓடுதே. இப்ப எங்க போச்சு அவங்க ராசி எல்லாம்?''

''ஆமா இப்படித் துறு துறுன்னு இருக்கியே... இதுதான் உன் கேரக்டரா?''

''சந்தோஷ் ஹாசினி அப்படியே நான்தான். அதனாலதான் என்னால ரொம்ப சரியா பண்ண முடிஞ்சது. இப்ப படம் பார்த்த சின்னச்சின்னப் பசங்ககூட என்னை மாதிரி இமிடேட் பண்ணி விளையாடுறாங்க. எங்க பக்கத்து வீட்டுச் குட்டி ஒண்ணு, தன் பேரை 'ஹாசினி'ன்னு சொல்

**அழகான உணர்வு மட்டுமல்ல காதல்; இப்ப இருக்கிற சாதிச் சண்டை பூசல்களுக்கு ரொம்ப அற்புதமான மருந்தும்கூட.**

விட்டு ஸ்டைலா பேசறா; நடக்கறா. கொம்பு முளைக்காம இருக்க அப்பப்ப முட்ட வர்றா. நீகூட அந்த ஹீரோயின்ஸ் கூட நடிக்கிற போல?''

''அடுத்து பண்ற 'பேராண்மை'லதான் இப்படி மல்லுக் கட்டுறேன். அப்பப்ப ஆக்ஷன் பண்ணிட்டிருந்தவன் இந்தப் படத்துல முழுசா இறங்கிட்டேன். அமீர் சார் இயக்கத்துலகூட ஒரு படம் பண்றதா இருக்கேன். நீ அசின் மாதிரி இந்திக்குப் போயிட்ட போலிருக்கே?''



''ரெண்டு படம் சைன் பண்ணியிருக்கேன். ஒரு தெலுங்குப் படமும் கைவசம் இருக்கு. என்ன படம் பண்ணி என்ன? உன்கூட நடிச்ச மாதிரி வருமா ரவி!''

''ஐஸ்?''

''ச்சே... ச்சே... நிஜம்மா 'பொம்மரிலு', 'சந்தோஷ்' ரெண்டையும் மறந்தா நான் மனுஷியே இல்ல.''

''கரெக்ட் இப்பத்தான் நீ பேசியிருக்கே. நீ மனுஷியே இல்ல!''

''போய்! என்னை 'மிருகம்'னு சொல்றியா...?''

''ச்சே ச்சே... அது 'சாமி' டைரக்ட் பண்ண படம். நீ சரியான மாமி! அதுவும் சாதாரண மாமி இல்ல. தில்லாலங்கடி மாமி!''

''ரவி, வாட்ஸ் தட் தில்லாலங்கடி?''

''உனக்கு அர்த்தம் சொல்லியே என் மென்டல் டிக்ஷ்னரி பழசாயிடும்! ஆள விடு தாயீ. நான் அம்பேல் ஆகறேன்!''

– **மு.மாறன்**

அட்டை மற்றும் படங்கள் : **ஸ்ரீஹரி**

# குப்பை!

''ஏண்டி! ஊட்டுக்காரன் வர்ற நேரம் தெரியாதா ஒனக்கு? அப்பத்தான் பக்கத்து வீட்டுப் பொம்பளகிட்ட பேசறதுக்குப் போயிடுவியா? ஊடு தங்கணுமின்னாலே உனக்கேன்டீ அப்டி கசக்குது?'' என்று வீட்டுக்குள் நுழைந்த அஞ்சலையைப் பார்த்துக் கோபமாகக் கேட்டான் மாணிக்கம். ''இல்ல... தே! இப்பத்தான் கொஞ்ச நேரத்துக்கு முன்னால போனேன். அவுங்க ஊட்டு ரேசன் கார்ட வாங்கினுப் போயிருந்தேன். அத்தக் குடுத்துட்டு வரலாமின்னுதான் போனேன். அப்டியே கொஞ்ச நேரம் பேசினு இருந்துட்டோம்'' என்று சமாதானம் சொல்லியபடியே கலைந்து கிடந்த பொருட்களை ஒழுங்குபடுத்தத் துவங்கினாள். ''ஆங்... ஊட்டப் பாரு. எம்மாங் குப்பைனு பெருக்கறதுக்குக்கூட முடியலியா உனக்கு? ஊடு, ஊடு மாதிரியாடீ இருக்குது? இதுக்கெல்லாம் உனுக்கு எப்டிடீ நேரமிருக்கும்? அதான், ஊர்க்கதை பேசறதுக்கே நேரம் பத்தலையே!'' என்றான் ஆவேசமாக.

''அதில்ல... இன்னிக்கு ரேசன் கடை, பஜாருன்னு கொஞ்சம் வெளியிலயே வேலயா இருந்துட்டேன். நீ வர்றதுக்குக் கொஞ்சநேரம் முன்னாலதான் நானும் ஊட்டுக்கே வந்தேன்'' என்றாள்.

''ஏய்... நிறுத்துடீ... ஏதாவது சாக்கு சொல்லினு...'' என்றான் மாணிக்கம்.

''என்னாய்யா ஒரேடியா குதிக்கற? இன்னிக்கு ஒரு நா தானே, இப்படி ஆயிடுச்சு. இதுக்குப் போயி...! நான் ஊட்டு வேலைக்குப் போறனே ஆபீசர் ஊடு... அவ்ளோ பெரிய ஆபீசர்கூட யாரையும் எதிர்பார்க்காம சமயத்துல அவரே பெருக்கிக்குவாரு. இன்னிக்கு ஒரு நாள் நான் இல்லன்னா, நீயே பெருக்கக் கூடாதா?'' என்று சொல்லியபடி குனிந்து பெருக்கிக்கொண்டே வந்தவள் எதேச்சையாக நிமிர்வதற்கும்



''நம் அரசர் சாப்பாட்டுப் பிரியர். அதனால்தான் சுயம்வரத்தில் இளவரசியை வடைமாலையை வீசச் சொல்லி விட்டார்.

- சாயம் வெ.ராஜாராமன்

ச.முத்துவேல்

அவன் சற்றும் எதிர்பாராத வகையில் அவன் கன்னத்தில் பளாரென்று மாணிக்கம் அறைவதற்கும் சரியாக இருந்தது. அடிவாங்கி உறைந்துபோய் நின்றுகொண்டிருந்தாள் அஞ்சலை. ''அடிங்...! யாரைப் பாத்து பெருக்கக் கூடாதான்னு கேக்கற? உனக்கு அவ்ளோ கொழுப்பாயிடுச்சா? என்னை என்ன பொட்டைன்னு நெனச்சியா? இருடி... உன்னை வந்து வச்சிக்கறேன்'' என்று ஆவேசத்தோடு திட்டிக்கொண்டே, வாசலில் கிடந்த ரப்பர் செருப்புகளை மாட்டிக்கொண்டு, காதில் செருகியிருந்த ஒற்றை பீடியைப் பற்ற வைத்துக்கொண்டு வெளியேறினான்.



**ம**றுநாள் காலை. வழியில் சைக்கிள் பஞ்சராகிப் போனதால் தாமதமாகிவிடவே, பதற்றத்தோடு அவசர அவசரமாக அலுவலகத்துக்குள் நுழைந்தான். ஆனால், அதற்குள் மானேஜர் விசாலாட்சி வந்து விட்டிருந்தாள். ''என்ன... மாணிக்கம்! இப்பத்தான் விடிஞ்சதா? ம்...ஆஃபீஸ் எப்படியிருக்குதுன்னு பார்த்தீங்களா? ஒண்ணு, காலைல சீக்கிரம் வந்து வேலையை முடிக்கணும். இல்லன்னா, அட்லீஸ்ட் சாயந்தரமேயாவது வீட்டுக்குப் போறதுக்கு முன்னால க்ளீன் பண்ணிட்டுப் போகணும். ரெண்டுங் கிடையாது. பார்த்தீங்களா... எவ்வளவு மோசமாயிருக்குன்னு! ம்... மசமசன்னு நிக்காதீங்க. சீக்கிரம் என் ரூமை க்ளீன் பண்ணுங்க'' என்று கத்திவிட்டு, அறையைவிட்டு வெளியே வந்தாள் விசாலாட்சி. ''சரிங்கம்மா'' என்று அவசரமாக துடைப்பத்தை எடுக்கப் போனான் மாணிக்கம். ●

# மங்கல மங்கை; மாப்பிள்ளை பெருமாள்!



* ஜீயர் சுவாமிகள்

**பா**ண்டிய நாட்டுத் திருத்தலங்கள் பதினெட்டுக்குள் முக்கியமான ஒன்று வானமாமலை. நாங்குநேரி என்றும், தோதாத்ரி என்றும், ஸ்ரீவரமங்கலநகர் என்றும் பலவாறாக அழைக்கப்படு கிறது. திருநெல்வேலி - கன்னியாகுமரி மார்க்கத்தில் இருக்கிறது.

திருக்குறுங்குடி வடிவழகிய நம்பி பெருமாள் தம்முடைய வடிவழகினால் -லாவண்யத்தினால் நம்மை ஆட்கொண் டார் என்றால், இந்த வானமாமலை தெய்வநாயகப் பெருமாள் தமது ஔதார் யத்தால் நம்மை வசப்படுத்திக்கொள் கிறார். ஔதார்யம் என்றால் வள்ளல் தன்மை - வாரி வாரி அருளையும் கருணையையும் வழங்கும் தன்மை உடையவன் இந்த தெய்வநாயகப் பெருமாள். நம்மாழ்வார் இவனை எப் படிப் பாடுகிறார் என்று பார்ப்போம் :

*தோற்ற நோன்பு இலேன்;*
*நுண்-அறிவு இலேன்; ஆகிலும்,*
*இனி உன்னை விட்டு ஒன்றும்*
*ஆற்ற கிற்கின்றிலேன்; அரவின்*
*அணை அம்மானே!*
*சேற்றுத் தாமரை செந்நெல் ஊடு மலர்*
*சிரீவரமங்கல நகர்*
*விற்றிருந்த எந்தாய்! உனக்கு மிகை*
*அல்லேன் அங்கே.*

என்று சரணாகதி பண்ணுகிறார்!

''என்னிடம் கர்மயோகம் இல்லை; ஞானயோகம் இல்லை, கண்டிப்பாகப் பக்தி யோகமும் இல்லை... ஆயினும் உன்னை விட்டுப் பிரிய முடியாத ஆவல் மிகுதியால் வானமாமலைக்கு வந்துள்

ளேன்'' என்கிறார்.

ஆழ்வாரே இப்படிச் சொல்லி சரணாகதி பண்ணுகையில், எப்பேர்ப்பட்ட எளியவனையும் ஏற்று தனது வள்ளன்மையை அருளக்கூடியவன் தெய்வநாயகப் பெருமாள் என்பதற்கு வேறென்ன சான்று வேண்டும்!

இந்தப் பெருமாள் ஸ்வயம் வ்யக்தமாக யாராலும் கட்டி எழுந்தருளப்பண்ணப்படாதவராகத் தோன்றியவர். அவரை ஸேவிக்கும் முன் நாம் முதலில் ஸ்ரீவரமங்கை நாச்சியாரைத்தான் ஸேவிக்கவேண்டும். ஸ்ரீ என்றால் மங்களச் செல்வங்கள் என்பது அனைவருக்கும் தெரியும். மங்கை என்றால் பெண் என்பதும் தெரியும். வரமங்கை என்கிறபோது, மங்களச் செல்வங்களை வரமாக வாரித் தருபவள் என்று பொருள். பெருமாளின் ஔதார்ய குணத்துக்கு ஏற்றவாறு தாயாரும் நாம-ரூப-குண வைபவங்கள் வாய்ந்தவளாக அருள்பாலிக்கிறாள். அவளிடம் போய் நின்றவுடனேயே நமது குறைகள் எம்பெருமானின் கண்களுக்குத் தெரியாதபடியும் நம்மை அவன் மன்னிக்கும்படியும் செய்துவிடுகிறாள்.

இந்தக் கோயிலுக்கு நாம் வரும்போது ரொம்ப ஆச்சர்யமான சன்னிதி வீதியைக் கடந்து வரவேண்டும். வீதியின் கடைசியிலே பெருமானுடைய திருக்கோயில். அதன் வாசலில் பெரிய மண்டபம். மண்டபத்தின் ஒரு புறத்திலே இந்த திவ்யதேசத்துக்கே நிர்வாகஸ்தராய், கோயிலுக்கும் நிர்வாகஸ்தராய் இருக்கக்கூடிய ஸ்ரீமத் பரமஹம்ஸ வானமாமலை கலியன் ராமானுஜ ஜீயர் ஸ்வாமியினுடைய மடம் இருக்கிறது. இந்த ஜீயர் ஸ்வாமிகளின் செல்வத் திருமகளாகவே கருதப்பட்டு, சீராட்டப்படுகிறாள் ஸ்ரீவரமங்கை நாச்சியார். இந்த பந்தம் எப்படி விளைந்தது...?

எட்டு யானைகளைப் போல் எட்டு ஆச்சார்யர்களை, திக்குக்கொருவராய் ஸ்தாபித்தார் மணவாளமாமுனிகள். அவர்களுள் பிரதானமானவர் பொன்னடிக்கால் ஜீயர் ஸ்வாமி. எல்லா கோயில்களையும் ஸேவிக்க வேண்டும் என்கிற ஆசையோடு யாத்திரையாகப் புறப்பட்டார் அவர். திருமலை - திருப்பதிக்கும் போனார். இப்போது ஸ்ரீவரமங்கை நாச்சியாராக இங்கே வானமாமலையில் எழுந்தருளியுள்ள தாயார், அப்போது திருமலை - திருப்பதியில் தனிக்கோயில் நாச்சியாராக இருந்தாள். அங்கிருந்த அர்ச்சக ஸ்வாமி, ஸ்ரீநிவாஸ பெருமாளுக்கும் அவளுக்கும் திருக்கல்யாண உத்ஸவம் நடத்த முயற்சி எடுத்தார். ஆனால் வேங்கடேசன் எம்பெருமானின் திருமார்பில் உறையும் அலர்மேல்மங்கை நாச்சியார், அர்ச்சகருடைய ஸ்வப்னத்திலே எழுந்தருளி, ''நான்தான் இவனுக்கு

**வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் சுவாமிகள்**

# கண்ணனைத் தேடி...



**6**



* ஆஞ்சநேயர் - தூண் சிற்பம்

வானமாமலை பெருமானும் அவருக்கு 'மாப்பிள்ளை' ஆனான்!

ஒவ்வொரு ஆண்டும் இந்தப் பெண்ணான ஸ்ரீவர மங்காத் தாயாரும் மாப்பிள்ளையான தெய்வநாயகப் பெருமாளும் ஜீயர் ஸ்வாமியினுடைய மடத்துக்கு, சீர் கொண்டாடுவதற்காக வருகிறார்கள். பொன்னடிக்கால் ஜீயர் ஸ்வாமியினுடைய திருநக்ஷத்திரமான புரட்டாசி புனர்வசு அன்று இந்த வருகை. இது தவிர, பிரம்மோத்ஸவத்தின் ஒன்பதாவது திருநாளன்றும் சங்கராந்தியை அடுத்து வருகிற கனுப்பிடி தினத்தன்றும் தாயார் பிறந்த வீட்டுக்கு வருகிறாள்! பெண்கள் தங்கள் பிறந்த வீட்டுக்குச் சென்றுதானே கனுப்பிடி வைப்பது வழக்கம். அந்த வழக்கப்படி தாயாரும் செல்கிறாள்!

**தா**யார் இங்கே வந்த கதையைக் கேட்டுப் பூரித்து வீதியிலேயே நின்றுவிடாமல் உள்ளே போவோம். தாயாரை ஸேவித்துவிட்டு பெருமாளின் சன்னிதிக்குச் செல்வோம்.

நாச்சியார்; அந்நாச்சியார் இவனுடையவள் அல்லள்!'' என்று சொல்லிவிட்டாள்! அர்ச்சகர் ஸ்வாமிக்கோ ஒரே வியப்பு. இந்தச் சமயத்திலேதான் ஜீயர் ஸ்வாமி திருமலைக்கு எழுந்தருளினார். அதே சமயத்தில் தனிக்கோயில் நாச்சியார் ஒவ்வொரு அர்ச்சகருக்கும் ஸ்வப்னத்தில் தோன்றி, ''நம்மை பொன்னடிக்கால் ஜீயருடன் அனுப்பி வையுங்கள்; நாம் வானமாமலைக்குச் செல்ல வேண்டும்'' என்று சொல்ல, அடியார்கள் பேருவகை பூண்டார்கள். ஜீயர் ஸ்வாமிகள் அந்த நாச்சியாரை வானமாமலைக்கு அழைத்துக் கொண்டு வந்தார்; தம்முடைய மகளாகவே அவளை **பா**வித்து தெய்வநாயகப் பெருமானுடன் திருக்கல்யாணமும் பண்ணி வைத்தார். கோலாகலமாக கல்யாணம் நடந்தது.

**யார் அதிக ஸத்வ குணம் படைத்த தெய்வம் என்பதை அறியப் புறப்பட்ட ப்ருகு முனிவர், வைகுண்டத்திலே திருமாலின் மார்பில் உதைத்து அபசாரப்பட்டார்.**

இந்த திவ்யதேசத்து மூலமூர்த்தியான தெய்வநாயக பெருமாள், வைகுண்டத்திலே வாஸுதேவன் உறையும் அதே திருக்கோலத்திலே உறைகிறார். ரொம்ப ஆச்சர்யமான சன்னிதி. ஸ்ரீதேவியும் பூமிப்பிராட்டியும் பெருமாளுடைய சன்னிதிக்குள்ளேயே

எழுந்தருளியிருக்கிறார்கள். நடுநாயகமாக பெருமாள். அவருக்குப் பக்கத்திலே சூர்ய-சந்திரர்கள் இருக்கிறார்கள். மேலே, வெண்சாமரம் வீசிக்கொண்டு, ஊர்வசியும் திலோத்தமையும் எழுந்தருளியிருக்கிறார்கள். இப்படி பந்து பரிவாரங்களோடே ஆனந்தமாகக் காட்சியளிக்கிறான் எம்பெருமான். இவர்கள் ஒவ்வொருவரும் இங்கே வந்து சேர்ந்ததே சுவையான செய்தி:

யார் அதிக ஸத்வ குணம் படைத்த தெய்வம் என்பதை அறியப் புறப்பட்ட ப்ருகு முனிவர், வைகுண்டத்திலே திருமாலின் மார்பில் உதைத்து அபசாரப்பட்டார். பின்னர் மனம் நொந்து அவர் திருவடிகளிலே விழுந்து பிரார்த்தித்தார். பெருமானும் ''கவலை வேண்டாம்: தோதாத்ரி திவ்ய தேசத்துக்குச் சென்று நம்மைக் குறித்துத் தவம் இயற்றும்'' என்று ப்ருகுவை அனுப்பினார். அவர் தவத்தை மெச்சி, ''உமக்குப் பெண்ணாக ஸ்ரீதேவி நாச்சியார் பிறப்பாள்'' என்று அருளினார் பெருமான். ஆகையினாலே இந்தச் சன்னிதியில் ப்ருகு மார்க்கண்டேய முனிவர்களும் இருக்கிறார்கள்; ப்ருகுவின் திருமகளாய் அவதரித்த ஸ்ரீதேவி நாச்சியாரும் இருக்கிறார்.

பூதேவி நாச்சியார் எப்படி வந்து சேர்ந்தார்? மது-கைடபர்கள் என்கிற அரக்க சகோதரர்களின் துன்புறுத்தல் தாளாமல் தேவர்கள் பெருமானிடத்திலே பிரார்த்திக்க, அவன் அவர்களை முடித்தான். அப்போது பூமியெங்கும் அவர்களுடைய உடற் பாகங்கள் சிதறியதால் பூமிப்பிராட்டிக்கு வருத்தம் ஏற்பட்டது. 'நாம் அழுக்காகிப் போனோமோ?' என்று பெருமானிடத்திலே பிரார்த்தித்தாள். இத் திருத்தலத்துக்கு வந்துதான் தவம்புரிந்தாள். பெருமானும் மகிழ்ந்து அவளது துயரைப் போக்கி, அப்போதே தமது இடப்புறத்திலே அமர்த்திக்கொண்டான்.

ஊர்வசிக்கும் திலோத்தமைக்கும் ஒரு முறை தங்களுள் யார் பெரியவர் என்கிற போட்டி வந்தது! அதைத் தீர்த்துக் கொள்ளும் என்று தோதாத்ரி திவ்யதேசத்துக்கு



* திருப்பணி செய்த திருமலை நாயகர்

வந்தார்கள். பெருமாளைக் குறித்துத் தவம் செய்தார்கள். அவரும் ஸேவை சாதித்தார். ''சண்டை அப்புறம் போடலாம், முதலில் இருவரும் சேர்ந்திருந்து எமக்குச் சாமர கைங்கர்யம் பண்ண வேண்டும்'' என்று இருவரையும் இருத்தினான் எம்பெருமான். அந்த அருகாமை கிடைத்ததும் 'யார் பெரியவர்' என்ற சண்டை மறந்துபோயிற்று அவர்களுக்கு!

தக்ஷயக்ஞத்தின்போது சிவபெருமானின் சொல்லை மீறி தாக்ஷாயணி அவமானப்பட்டாள். அதன் காரணமாக தக்ஷனுக்கும் சிவகணங்களுக்கும் நிகழ்ந்த யுத்தத்தில் சூர்ய - சந்திரர்களுக்கு ஆபத்து வந்தது! அவர்களும் பரமசிவனாரோடு யுத்தத்துக்குப் போயிருக்கிறார்கள். அடிபட்டு, பல் தெறிபட்டுப்

**பூமியெங்கும் அரக்கர்களின் உடற்பாகங்கள் சிதறியதால் பூமிப்பிராட்டிக்கு வருத்தம் ஏற்பட்டது. 'நாம் அழுக்காகிப் போனோமோ?' என்று.**

போய் சிரமப்பட்டார்கள். இழந்த பெருமையை மீட்டுக்கொள்ள தோதாத்ரி திருத்தலத்துக்கு வந்து தவம்புரிந்து அவன் அருள் பெற்றார்கள்; இழந்த பெருமையை மீண்டும் பெற்றார்கள்... ''உன் அருகிலேயே ஸேவித்துக்கொண்டிருக்கவேண்டும்'' என்று அவர்கள் ஆசைப்பட, பகவான் அவர்களை கர்பகிருஹத்துக்குள்ளேயே வைத்துக்கொண்டான்!

அதையன்றோ நாமும் பிரார்த்திக்க வேண்டும்?- எப்போதும் பகவானிடத்திலே அவன் அண்மையிலே இருக்கும் பாக்கியத்தைப் பிரார்த்திக்க வேண்டும். அப்படிப் பிரார்த்திப்பதற்கான ஸ்ரீவரமங்கல திருத்தலத்துக்கு, வானமாமலை என்றும் தோதாத்ரி என்றும் ஏன் பெயர் வந்தது...? அதை அடுத்த வாரம் பார்ப்போம்.

**(தேடுவோம்)**

படங்கள் : **ஸ்ரீஹரி**

சித்திரங்கள் : **வேதா**



''நாய்க்கு தாயத்து கட்டியிருக்கியே...?''

''பாவம் ஜிம்மி, நேத்து ராத்திரி ஒரு திருடனைப் பார்த்து இது பயந்துடுச்சு!''

- தஞ்சை தாமு





Discount upto 30% off

For purchase of Rs.**25000**/- & above
2 gram Gold coin **FREE**

For purchase of Rs.**50000**/- & above
5 gram Gold coin **FREE**

Dealers: Kurl-on® Sleepwell.










**Sree Gayathri Sales Corporation**

தரம் என்றும் நிரந்தரம்! அதுவே எங்கள் தாரக மந்திரம்!!

We make all kinds of furniture & Interior Works

#29. Royapettah High Road, Chennai - 600 014. Ph:044-28131220 Mobile: 98402 06669

எல்லா காலத்திலும் நண்பர்கள் அவரவர் வீட்டிலிருந்து கொண்டு வரும் உணவை, பணியிடத்தில் பகிர்ந்து சாப்பிடுவது வழக்கம்தான். ஆனால், இப்போதெல்லாம் பாதி சாப்பிடும்போது உணவைப் பகிர்ந்துகொள்வது நட்பைப் பகிர்ந்துகொள்வதாக நினைக்கிறார்கள். இவர்கள் இன்னொன்றையும் பகிர்ந்து கொள்ள இதில் வாய்ப்பு இருக்கிறது- நோய்கள்!

ஒருவர் எச்சில் செய்த உணவை மற்றவர் சாப்பிடும்போது, அவர்கள் உடலுக்குள் எச்சில்மூலம் பாக்டீரியா செல்கிறது. அதுவும் காசநோய் போன்ற சில நோய்கள், நிச்சயம் எச்சில் மூலம் பரவக்கூடியவை. எனவே எச்சில் உணவைப் பிறருடன் பகிர்ந்துகொள்வதைத் தவிர்த்துவிடுவது தான் நல்லது.

நட்பின் இலக்கணத்தில் இது சாத்தியமில்லை என்றால், அதனால் வரும் நோய்களுக்கெதிராகப் போரிடக்கூடிய, கவசம் போல் நம்மைக் காக்கிற ஒரு முக்கிய உணவு எது தெரியுமா? கீரைதான்.

- அகத்திக் கீரையில் வைட்டமின் ஏ சத்து நிறைய உண்டு. கண் பார்வை தெளிவாக இருக்கும். ஞாபகசக்திக்கும் ஏற்றது.
- அகத்திக் கீரையைத் துவரம் பருப்புடன் சேர்த்துச் சாப்பிட்டால், மலச்சிக்கல் வராது.
- முருங்கைக் கீரையில் சுண்ணாம்புச் சத்தும், வைட்டமின் ஏ சத்தும் நிறைய உள்ளன. இதைத் தொடர்ந்து சாப்பிட்டால் பற்களில் உள்ள கோளாறுகள் மறையும். தாய்ப்பால் சுரப்பதற்கும் இது ஏற்றது. உடலுக்குப் பலம் கொடுக்கும்.
- அரைக்கீரை நரம்புத் தளர்ச்சியைக் கட்டுப்படுத்துவதில் தேர்ந்தது. உடலில் உற்பத்தியாகும் வாயுவை நீக்கும். கண் பார்வை தெளிவடையும். சிறு கீரையுடன் மிளகையும் சீரகத்தையும் சேர்த்து வேக வைத்து, கடைந்து, சாதத்துடன் சாப்பிட்

# தங்கம் உறிஞ்சும்

* எச்சிலுடன் நோயையும் பகிர்ந்தாக வேண்டும்!

## நியூ டேஸ்ட்டி ட்ரீட் - 8

## கூலா சாப்பிடுங்க!

டாக்டர் எம். ராஜேந்திரன்

# தாவரம்!





டால் உடல் வலி குணமாகும்.

● முளைக்கீரை என்றால் முற்றாமல் இளசாக இருப்பது தான் நல்லது. இதில் பல உயிர்ச்சத்துகள் உள்ளன. வைட்டமின் பி1, பி2, ஏ, சி ஆகியவற்றுடன் கண்ணாம்புச் சத்து, இரும்புச் சத்து ஆகியவையும் இதில் உள்ளன.

● கரிசலாங்கன்னிக் கீரை நிறைய மருத்துவ குணம் கொண்டது. கல்லீரலுக்கு மிகவும் ஏற்றது. குடிகாரர்களுக்கு, கல்லீரல் பாதிக்கப்படும் வாய்ப்பு மிக அதிகம். குடித்துவிட்டு ஹாங்க் ஓவரில் இருப்பவர்களுக்கும் கரிசலாங்கன்னிக் கீரை நல்லது. கொஞ்சம் சீக்கிரமாகவே உணர்வுக்கு வர வழைக்கும். சிறிது சிறிதாக கல்லீரலைப் பழைய ஆரோக்கிய நிலைக்குக் கொண்டு வர கரிசலாங்கன்னி உதவும்.

வள்ளலார்கூட உணவின் மகத்துவத்தை விளக்கியிருக்கிறார். அவரது மனப்பக்குவம் மற்றும் உடல் பழக்கம் காரணமாக, அவர் உடலே ஒளி ஊடுருவும் தன்மை கொண்டதாக இருந்தது என்பார்கள்.

பூமியில் உள்ள பல சத்துகளை (குறிப்பாக, தங்கம் உட்பட) மிக அற்புதமாக உறிஞ்சிக்கொள்ளும் தாவரம் கீரைகள் மட்டும்தான். இவற்றை உட்கொள்வதால், 'மெய்'க்கு மெய்யாகவே நன்மைகள் உண்டாகின்றன.

ஆலிலை, அரசிலை, தாமரை இலை போன்றவற்றைச் சாப்பிட்டால் நல்லது. கிருமிகள் இவற்றில் குடியேறுவதில்லை. வாழையிலை மற்றும் வாழைத் தண்டுகளும்கூட அப்படித்தான். தீர்க்காயுசு வேண்டுமெனில், தவம் இருக்க வேண்டாம்; தினம் ஒரு கீரை உண்டால் போதும்!





(தொடரும்)

எழுத்து வடிவம் : **ஆதர்ஷ்**

## மாங்காய் வெங்காயச் சட்னி

தேவைப்படும் பொருள்கள் (1 கப்புக்கு)

துருவிய மாங்காய் - அரை கப்
துருவிய வெங்காயம் - அரை கப்
துருவிய வெல்லம் - 3 டீஸ்பூன்
வறுத்த சீரகப் பொடி - கால் டீஸ்பூன்
மிளகாய்ப்பொடி - கால் டீஸ்பூன்
உப்பு - கால் டீஸ்பூன்

மேலேகூறிய அனைத்தையும் ஒன்றாகக் கலந்து, வெல்லம் இளகிய நிலை வரும்வரை கிளறி, பாத்திரத்தில் எடுத்துத் தனியே வைத்துச் சாப்பிடலாம்.






"உண்ணாவிரதத்துல
கலந்துக்கிட்ட நடிகை
மயக்கம் போட்டுட்டாங்களே!"

"அவங்கதான் நடிப்புத்
திலகமாச்சே!"

- வசீகரன்

# ஸ்மைல் ப்ளீஸ்...

"தலைவரு பயங்கரமான
ஆளுய்யா..."

"என்னாச்சு?"

"உங்க மீது விசாரணை கமிஷன்
வருதுன்னு சொன்னதுக்கு, 'விசார
ணையை விட்டுத் தள்ளு, கமிஷன்
பற்றி மட்டும் பேசுய்யா'ன்னு
சொன்னாரே!"

- எம்.அசோக்ராஜா





"தலைவர் சாமர்த்தியம் யாருக்கு வரும்?!"

"எதைச் சொல்றீங்க?"

"நடைப் பயணத்துக்குக்கூட தன்னோட பினாமிகளையே
பயன்படுத்தறாரே!"

- அனன்யா

# என்ன இது?



இது அமெரிக்காவில் உள்ள
...ர் இடம் என்று யூகித்திருப்பீர்கள்...
ஆனால், இந்த ரம்மியமான
சூழலில் என்ன நடக்கிறது என்று
கண்டுபிடிக்க முடியுமா? ஊஹூம்..!
முடியாவிட்டால் ஜூட் விடுங்கள்
பக்கம் 58க்கு





பக்தி ஐம்பது சதவிகிதம், பரவசம் ஐம்பது சதவிகிதம் என்று உங்களை உற்சாகத்தின் உச்சிக்குக் கொண்டு செல்வதற்கு தமிழ்நாட்டில் ஒரு இடம் சொல்லுங்கள் என்றால், கண்ணை மூடிக்கொண்டு கொல்லி மலை என்று சொல்லலாம். மெய் சிலிர்க்க வைக்கும் கொண்டை ஊசி வளைவுகள், பசுமைக்குப் பஞ்சமில்லாத மலைப்பாதை, ஜன்னலை ஊடுருவி உள்ளே வந்து உடலைத் தாக்கும் சிலுசிலு காற்று, கும்மாளம் போட்டபடி குதித்துக்கொண்டிருக்கும் அருவி என்று இயற்கை எழிலுக்குப் பஞ்சமில்லாத பிராந்தியம் கொல்லிமலை.

நாமக்கல் மாவட்டத்தின் பிரதானமான சுற்றுலாத்தலமான கொல்லிமலை, கடையேழு வள்ளல்களுள் ஒருவரான வல்வில் ஓரி என்ற மன்னனின் ஆளுகையின்கீழ் இருந்தது என்கிறது ஸ்தல புராணம். நாமக்கல்லில் இருந்து கொல்லிமலைக்கு அரசு மற்றும் தனியார் பேருந்துகள் செல்கின்றன. சமீபகாலமாக மினி பேருந்துகளும் ட்ரிப் அடிக்கத் தொடங்கியிருக்கின்றன. மொத்தம் 52 கி.மீ.



**சில்லென ஒரு சிற்றுலா**

# கொள்ளையழகு

பயணம். கண்ணுக்கெட்டிய தூரம் வரை செங்குத்தான மலைப்பாதை.

அலைமோதும் காற்றை எதிர்கொண்டபடியே பயணிக்கும்போது, வாகனம் வளைந்து நெளிந்து செல்வதைத் துணிச்சல் உள்ளவர்கள் குதூகலம் பொங்க அனுபவிக்கலாம். பயந்த சுபாவம் கொண்டவர்கள், கண்ணை மூடிக்கொண்டு பயணம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. கண்ணுக்குக் குளிர்ச்சியான பசுமை தவழும் மலைப்பாதையை ஜன்னல் வழியே ரசித்தபடியே பயணிக்கலாம். கிட்டத்தட்ட எண்பது கொண்டை ஊசி வளைவுகள்; நீண்டு, சடாரென்று வளைந்து, எதிர்பாராத சமயத்தில் நெளிந்து செல்லும்போது கிடைக்கும் த்ரில் அனுபவங்கள், உங்களைச் சொக்க வைக்கும் என்பதில் சந்தேகமில்லை.



**கொ**ல்லிப்பாவை கேள்விப்பட்டிருக்கிறீர்களா? சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி போன்றவற்றில் சிறப்பித்துச் சொல்லப்பட்ட இந்தப் பாவை, பெண் வடிவம் கொண்டது; உடல் உறுப்புகள் அசையும் தன்மை கொண்டவை என்பதெல்லாம் புராணகாலத்துச் செய்திகள். இந்தப் பாவையின் பெயராலேயே கொல்லிமலை அழைக்கப்படுகிறது.

இந்த மலையின்மீது இருக்கும் குகைகளில் முனிவர்கள் தவத்தில் ஈடுபடுவது வழக்கம். அப்படி முனிவர்களும் சித்தர்களும் தவத்தில் ஈடுபட்டிருக்கும்போது, அதனைக் கலைக்கும் வகையில் அரக்கர்கள் செயல்படுவார்கள் என்றும், அவர்களிடமிருந்து முனிவர்களைப் பாதுகாக்கும் காரியத்தில் இந்தக் கொல்லிப்பாவை ஈடுபட்டது என்பதும் ஐதீகம்.

கொல்லிமலைக்குச் செல்பவர்களுக்கு முதலில் கிடைப்பது தெய்வ தரிசனம்தான். எல்லையில் இருக்கும் அம்மனுடைய பெயர், நாச்சியாயி. அந்த ஆலயத்தில் சிறிது நேரம் ஓய்வெடுத்துவிட்டு, கையில்



ஏதேனும் தின்பண்டங்கள் கொண்டு வந்திருந்தால் சாப்பிட்டுவிட்டு, மலை யேறத் தொடங்க வேண்டியதுதான். மலைப் பாதைகளில் பேருந்து பயணத்தால் தலை சுற்றல், குமட்டல் ஏற்படக்கூடியவர்களுக்கு இந்தச் சுற்றுலா சிம்மசொப்பனமாக இருக்கக் கூடும்! உரிய பாதுகாப்புடன் செல்லுங்கள்?



மூலிகைக் காற்றை மெய்மறந்து ரசித்துக் கொண்டே சென்றால் நேரம் போவதே தெரியாது. பேருந்து சோளக்காடு கிராமத்தில் வந்து நிற்கும்போது ஒன்றரை மணி நேரம் கடந்திருக்கும். அருகில் இருக்கும் தொலைநோக்கி இல்லத்துக்குச் சென்று மலையின் அழகை டாப் ஆங்கிளில் ரசிக்கமுடியும். மலையழகை ரசித்துவிட்டு மீண்டும் வண்டி ஏறினால், பத்து கிலோ மீட்டரில் அறப்பளீஸ்வரர் திருக்கோயில் உங்களை வரவேற்கும்.

சதுரகிரி என்ற மலை உச்சியில் அமைந்துள்ள இந்தக் கோயிலைப் பற்றிப் புராணங்களில் விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. சதுரகிரி என்றால் நான்கு திசைகளிலும் மலைகளால் சூழப்பட்ட பகுதி என்று அர்த்தம். அறப்பளீஸ்வரர் ஆலயத்துக்கு அருகே மீன் பள்ளி என்ற ஆறு சலசலத்தபடியே ஓடிக்கொண்டிருக்கிறது.

இந்த ஆற்றில் வாழும் மீன்களை தெய்வமாக நினைக்கின்றனர் மக்கள். அதன் காரணமாக, மீன்களுக்கு பூ, பழம், தேங்காய் வைத்து பூஜை நடத்தப்படுவது வழக்கம். சுவாமி தரிசனம், மீன் பூஜை செய்து மனத்துக்கு உற்சாகம் ஏற்றிக் கொள்பவர்கள், அருகில் இருக்கும் கொல்லி அருவியில் குளித்து உடலுக்கும் உற்சாகம் ஏற்றிக் கொள்ளலாம்.

அங்கிருந்து நேராக எவரெஸ்ட்டை நோக்கிப் புறப்பட வேண்டியதுதான். ஆமாங்க, இமயமலைக்குச் சிகரம் எவரெஸ்ட் என்றால் கொல்லிமலைக்குச் சிகரம் செம்மேடு. மலையேறிக் களைத்தவர்கள் தங்கி ஓய்வெடுப்பதற்கு விடுதி, சாப்பிடுவதற்கு ஹோட்டல், வசதி படைத்தவர்களுக்கு வசதியாக ரிசார்ட்ஸ் என்று பஞ்சமில்லாத பிராந்தியம் செம்மேடு. குறைந்த செலவில் குடும்பத்தோடு தங்கி ஓய்வெடுத்துவிட்டு, அடுத்த கட்டப் பிரயாணத்தைத் தொடங்கலாம்.

கொல்லிமலையின் பிரதான அடையாளம் ஆகாய கங்கை என்னும் அற்புத அருவி. அறுநூறு அடி உயரத்தில் இருக்கும் அருவிக்கு எப்படிச் செல்வது? மலை உச்சியில் இருந்து படிகள் தொடங்கும். படிகளில் இறங்கத் தொடங்கினால், சில நிமிடங்களில் ஆகாய கங்கையைத் தொட்டுவிடலாம். அருவியைப் பார்த்தால் குளியல் போடவேண்டும் என்று தனியாகச் சொல்லத் தேவையில்லை. ஜம்மென்று குளியல் போட்டுவிட்டு, அருகில் இருக்கும் பஜ்ஜி கடைகளை மேய்ந்துவிட்டு, உற்சாகம் குன்றாமல் ஊருக்குக் கிளம்பவேண்டியதுதான்!

– **கலை**





# நடிக்கும் குரல்

"எனக்கென்னவோ இப்படி நாம தினமும் திருட்டுத்தனமா சந்திக்கறது பிடிக்கவேயில்லை. எப்போதான் வந்து என் அண்ணன்கிட்டே நம்ம கல்யாண விஷயமா பேசப் போறீங்க?" கேட்டாள் மீனா.

"அவசரப்படாதேடா மீனா கண்ணு. அதுக்கு நேரம் வரவேண்டாமா? இன்னும் உருப்படியா ஒரு வேலையே கிடைக்கலை. அதுக்குள்ளாற லவ்வு கிவ்வுன்னா அம்மா தோலை உரிச்சிடுவா" தன்னுடைய தலையைத் தடவி விட்டுக் கொண்டான் பிரகாஷ்.

"ஆமா. ஒரு வேலை கிடைக்கறதுக் குள்ள உங்க அழகான முடி, பாதி உதிர்ந்து நரை தட்டிடும் போல இருக்கு" பொங்கி வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டாள்.

"ஐயோ... என்னோட அண்ணா வர்றார். போலிருக்கே! இப்ப என்ன பண்றது?" என்றாள் திடீரென்று.

"நான் வேணும்னா ஒளிஞ்சுக்கவா?" பிரகாஷின் குரலிலேயே பதற்றம் தெரிந் தது.

"சீ... சுத்த கோழை நீங்க. அதுக்காக இப்படியா நடுங்கறது? வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டுன்னு தைரியமா பேசிடுங்க."

"வந்...து... வந்து... ச...சரி... பே...பேசி டறேன்..." பிரகாஷ் நாக்கு குழறுவதைப் பார்க்கச் சிரிப்பாய் வந்தது மீனாவுக்கு.

"அண்ணா.. இவர்தான் நான் சொன்னேனே... என்னோட அவர். ஏங்க, இவர் தான் எங்கண்ணா. ஒரு இண்டஸ்ட்ரி ரன் பண்ணிக் கிட்டிருக்கார்."

"ஸாரி... ஸார்.. வந்து... இவ தான் முதல்லே என்னை லவ் பண்ணா... ஏதோ தெரியாம சந்திச்சு..."

முடிப்பதற்குள் அந்த இளைஞன் தனது கரகரப்பான குரலில் பிரகாஷைப் பார்த்து,

"இதுக்கேம்பா இவ்வளவு பயப் படறே? நாளைக்கு வந்து என்னை மீட் பண்ணு. உனக்கு ஒரு நல்ல வேலைக்கு



**- புதுவை சந்திரஹரி**

ஏற்பாடு செய்யறேன்."

"கட்....ஓகே... பிரமாதம்..." என்ற டைரக்டர், பிரகாஷ் சாரைப் பார்த்து,

"இந்த ஐம்பதிலேயும், ஹீரோக்குரிய என்ன ஒரு இனிமையான குரல் சார் உங் களுக்கு! தொப்பையும் வழுக்கையும் இருந்தாகூட, சின்னப் பையனாட்டம் ஜமாய்க்கறீங்க. கதாநாயகனுக்கு உங்களை விட்டா, டப்பிங் குரலுக்கு வேற ஆளே கிடையாது சார். தூள் கெளப்பிட்டீங்க" என்றார் மகிழ்ச்சியோடு.

சென்னை கே.கே. நகரில் ஒரு பிள்ளையார் கோயிலில், அனைவரது கவனத்தையும் கவர்ந்த பளபளக்கும் ஜரிகை புடைவையில் மணப்பெண் டோனி கிளாஸ்பர். லண்டனைச் சேர்ந்தவர். மணமகன் ராஜா விக்ரமன், சென்னையைச் சேர்ந்தவர். கிரிக்கெட் வீரரான விக்ரமனுக்கும், கால்பந்து கோச்சான டோனிக்கும் காதல் திருமணம். இந்தியாவும் லண்டனும் கைகோத்த கதையை மாறி மாறி சொல்லத் துவங்கினர். முதலில் விக்ரமன் ஆரம்பித்தார்.

''1998ஆம் ஆண்டு சென்னையில் இந்தியா - பாகிஸ்தான் கிரிக்கெட் போட்டி



# காதல்,

நடந்த சமயத்தில், இந்திய அணிக்கு நெட் பிராக்டிசில் பந்து வீச, கிரிக்கெட் பந்து வீச்சாளரான நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன். அப்போது எனது திறமையைக் கண்ட பயிற்சியாளர், லண்டனில் மூன்று மாதம் கவுண்டி மேட்ச் ஆட அழைத்தார். அங்கே நிறைய கவுண்டி மேட்ச்கள் ஆடி, எனது திறமையை வெளிப்படுத்தினேன். 2005 வரை தொடர்ந்து ஆண்டுக்கு ஆறு மாதங்கள் அங்கே கிரிக்கெட் ஆடுவதற்கு வாய்ப்பு கிடைத்தது. அப்போது லண்டனில் ஓட்டல் வைத்திருக்கும் ஓர் இந்தியர் எனக்கு அறிமுகமானார். 'எதற்காக லண்டனில் ஆறுமாதம், இந்தியாவில் ஆறுமாதம் என்று இருக்கிறாய்? எனது ஓட்டலில் வேலை தருகிறேன். இங்கேயே தங்கி கிரிக்கெட் ஆடிக்கொண்டே வேலை பார்' என்றார். ஒர்க் பர்மிட்டும் வாங்கி எனக்கு வேலை கொடுத்தார்'' என்று முடித்ததும், 'இப்ப நான் சொல்றேன்'னு ஆரம்பித்தார் டோனி.

''நான் ஒரு கால்பந்து கோச். லண்டனில் சூப்பர் மார்க்கெட் நடத்தும் ஒருவர் என்னை விக்ரமனுக்கு, அறிமுகப்படுத்தி வைத்தார். இவர் ஒரு கிரிக்கெட் வீரர் என்பதால் நான் நட்புடன் பழகினேன். என் பெற்றோர்களுக்கு இவரை அறிமுகப் படுத்தி வைத்தேன். இவர் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வர, ஒரு கட்டத்தில் ஒருவர்மீது ஒருவர் ஈர்க்கப்படுவதை உணர்ந்தோம். எனவே, விக்ரமன் என்னிடம், 'நாம் இருவரும் திருமணம் செய்துகொள்ளலாமா?' என்று கேட்டபோது உடனடியாக சம்மதித்தேன். பெற்றோர்களும் என் முடிவை ஏற்றார்கள். ஆனால், எங்கள் காதலுக்கு திடீர் வில்லன் முளைத்தான்.'' அந்தாதி பாணியில், டோனி விட்ட இடத்தில் தொடர்ந்தார் விக்ரமன்.

**விக்ரமன் :** சில நாட்களில் நான் வேலை செய்த ஓட்டல் முதலாளிக்கும்

எனக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. நான் வேலையை ராஜினாமா செய்து விட்டு, வேறு ஒரு ஓட்டலில் வேலைக்குச் சேர்ந்தேன். இதனால் கோபமடைந்த என் பழைய முதலாளி, எனது ஒர்க் பர்மிட்டை அரசாங்கத்திடம் சமர்ப்பித்துவிட்டு, நான் ஒர்க் பர்மிட் இல்லாம, சட்டத்துக்குப் புறம்பாக லண்டனில் தங்கி வேலை செய்வதாகப் புகார் கொடுத்தார். நான் உடனடியாக லண்டனைவிட்டு வெளியேறி, புதிய பர்மிட் பெற்றுக்கொண்டு மறுபடி லண்டன் வந்து வேலை செய்யலாம் என்று சொல்லிவிட்டார்கள்.

**டோனி** : விக்ரமனுக்கு ஏற்பட்ட இந்தத் திடீர் பிரச்னையால் அவர் வேறு வழி இல்லாமல் இந்தியாவுக்குப் புறப்பட்டார். எனக்கு எல்லாவற்றையும் இழந்துவிட்டது போன்று ஒரு உணர்வு. ஒரு கட்டத்தில், இந்தியாவுக்குப் புறப்படுவது என்று முடிவு செய்தேன்.

**விக்ரமன்** : டோனி எனக்கு ஃபோன் செய்து, தாம் புறப்பட்டு வருவதாகச் சொன்னபோது இன்ப அதிர்ச்சி. என் குடும்பத்தினருக்கு விஷயத்தைச் சொல்ல, அவர்களும் டோனியை வரவேற்கத் தயாரானார்கள். விளையாட்டுக்காகக் காதலிக்கும் இக்காலத்தில், விளையாட்டினால் இணைந்த எங்கள் காதல் உண்மையானது, ஆழமானது என்று புரிந்துகொண்டார்கள்.

**டோனி** : விமானம் சென்னையில் தரை இறங்குவதாக அறிவிக்கப்பட்ட தருணத்தில், என் மனதுக்குள் பட்டாம்பூச்சிகள் பறந்தன. விமான நிலையத்தில் விக்ரமனைப் பார்த்தபோது, ஏற்பட்ட உணர்வை வார்த்தைகளில் சொல்ல முடியாது.

**விக்ரமன்** : கோயிலில், இந்து சம்பிரதாயப்படி திருமண ஏற்பாடுகள் நடந்தன. டோனியின் குடும்பத்தினரால், திருமணத்துக்கு வந்து கலந்துகொள்ள முடியாத சூழ்நிலை. ஒரு பிரிட்டிஷ் மருமகள் எங்கள் வீட்டுக்கு வந்ததில் இளைய தலைமுறையினருக்குக் கொள்ளை மகிழ்ச்சி.

**டோனி** : இந்திய மருமகளானது நான் செய்த புண்ணியம். சென்னையில் ஒரு நட்சத்திர ஓட்டலில் வேலை செய்யும் இவருக்கு, பிரிட்டிஷ் ஒர்க் பர்மிட் நிச்சயம் கிடைத்துவிடும். நாங்கள் இருவரும் மீண்டும் லண்டனில் மகிழ்ச்சியான மண வாழ்க்கையின் புதிய அத்தியாயத்தைத் துவக்குவோம்.

சந்திப்பு : **மௌலி**
படங்கள் : **யோகா**

# விளையாட்டல்ல..!



**சௌ**ம்யா, பாம்பே ஜெயஸ்ரீ, திலகவதி ஐ.பி.எஸ்., வீணை காயத்ரி, ஐஸ்வர்யா என, ஆளுமைமிக்க வி.ஐ.பி.களுக்கு ஒரு பொதுவான ரசனை உண்டு! எனி கெஸ்? முதல் பார்வையிலேயே நம்மை ஈர்த்து, மதிப்பளிக்க வைத்து விடும் இவர்களது தோற்றம். அதற்குக் காரணம், அவர்களின் புடைவை. வித்யாசமாக, நச்செனத் தெரிய, அழகாக புடைவை அணிகிறார்கள்.

''சில்க் காட்டன் என்றாலே ப்ரசாந்தின்னு பெயர் வாங்கியிருப்பதில் எங்களுக்குப் பெருமை. எங்களுடைய சில்க் காட்டன் புடைவையில் சுமார் 230 கிராம் சில்க், 200 கிராம் காட்டன் இருக்கும். லைட் வெயிட்! பட்டுப் புடைவைகள் கனக்கும். இது அரை கிலோதான் வெயிட் என்பதால் பெண்கள் அதிகமாக விரும்பிக் கட்டிக்கறாங்க. இதில் கலர், டிசைன்களும் ஏராளம். எங்களிடம் 400க்கும் மேற்பட்ட டிசைன்



# உடையழகு... நடையழகு...

கள் உண்டு. பல மூதாட்டிகள் தங்களிடம் இருக்கும் அந்தக் காலப் பட்டுப் புடைவைகளைக் காண்பித்து, அதே டிசைனில் சில்க் காட்டன் வேண்டும் எனக் கேட்பார்கள், நாங்களும் ஆசை ஆசையாக நெய்து தருவோம்...'' என நம்மை வரவேற்று, புடைவைகளைக் காண்பித்தவாறே சிரித்த முகத்துடன் பேசுகிறார், ப்ரசாந்தி நிறுவனர் திருமதி மாலதி முரளீதரன்.

படு நேர்த்தியாக அடுக்கப்பட்ட

# தேவதை



புடைவைகள், ஹாங்கரில் தொங்கும் புடைவைகள் கண்ணுக்கு இதம்.

பழங்காலத்து டிசைன்களான வைர ஊசி, பாவஞ்சி பார்டர் வேல்தாரி, தாழம்பூ டிசைன், இரட்டை பேட், ருத்ராட்ச பார்டர் ஒரு பக்கம் என்றால், நகாக, இக்கத், மதுபனி, கோலம், கரூத்தி, குந்தன் வொர்க், காந்தா வொர்க், ப்ளாக் ப்ரிண்டட்... என

ட்ரெண்டியான புடைவைகள்! பழமை + புதுமையின் ஜுகல்பந்தி.

''காலேஜ் பெண்கள், வேலைக்குப் போகும் இளம் பெண்கள் அதிகமா விரும்பி கட்டற கலர்ஸ்... மோவ், பெய்ஜ், மஷ்ரூம் கலர், ஆலிவ் க்ரீன்... இதெல்லாம் இப்போதைய ஹிட் கலர்ஸ். மிக மிக வயதானவர்களுக்கு மாத்திரமே சிம்பிளா தலைப்பு போட்ட புடைவை. மத்தபடி, எல்லா வயதினருமே பார்டர், தலைப்பு இதில் நேர்த்தியான டிஸைன் எதிர்பார்க் கறாங்க. ஆஃபிஸ் போகும் பெண்களுக் கென, லைட் வெயிட்டில் பாலிகாட், பாலிசில்க் புடைவைகள் 300 ரூபாயி லிருந்து உண்டு. பார்ட்டிகளில் உடுத் திக்கொள்ளவென ப்ளாக் ப்ரிண்டட் ஜரி பார்டர் அணிந்து பாருங்கள், கூட்டத்தில் தனித்துத் தெரிவீர்கள் காரண்டியா'' என்கிறார் மாலதி.

ப்ரசாந்தியில் ஒவ்வொரு நிகழ்ச்சிக் கெனவுமே கட்டிக்கொள்ள ரகவாரியா கப் புடைவைகளைப் பிரித்திருக்கிறார்கள்.

விவாகம், வைபோகம், நித்யம், ப்ரியம் (ப்ரிண்டட் அண்ட் எம்பிராய்டரி) என பெயரே நம்மைக் கவர்கிறது.

சாய்பாபாவின் மீது கொண்ட பக்தி யினால், ப்ரசாந்தி எனப் பெயர் சூட்டி யிருக்கிறார் மாலதி.

# ரகசியம்!

''ஊரே மாடர்ன் டிரஸ்ல இருக்கும் போது நாம மட்டும் அழகான, எளிமை யான, ஃபேஷனான புடைவையில தேவதை மாதிரி போனா, எல்லோர் கண்ணும் நம்மை மொய்க்கும்.

ஈஸியா மெயின்டெய்ன் பண்ணி, வித்யாசமா தெரிஞ்சு, பர்ஸுக்கும் பங்கம் வராம தேவதையாகும் ரகசியம் இதுதான். இதை நாம் சொல்லவில்லை, பெண்களே அப்படித்தான் பேசிக்கொள்கிறார்கள்'' என்று தேவதை ரகசியம் உடைக்கிறார் மாலதி.

- லதா சேகர்








# வையத்தை

இரா.முருகன்

ஒரு கடும்பனிக் காலம். ஸ்காட்லாந்து தலைநகர் எடின்பரோவில் அரதப் பழசான ஒரு வீட்டுக்குக் குடிபோய், பால் காய்ச்சிக் குடித்துவிட்டு, மடியில் லேப் டாப் கம்ப்யூட்டரைச் செல்லமாக இருத்தியபடி எழுதிக்கொண்டிருந்த நேரம். அப்போது விரல் தவறி இன்டர்நெட் பட்டனைத் தட்டிவிட்டேன். அடுத்த வினாடி, சடசடவென்று இன்டர்நெட் இணைப்பு ஏற்பட்டு, சென்னையிலிருந்து ஒரு சகபாடி 'சாட்'டில் வந்து 'சௌக்கியமாடா?' என்று விசாரித்தான். குடி போன வீட்டில் கேபிள் டீ.வி, பிராட்பேண்ட் வசதிகள் இன்னும் வராத நேரம். சாதா தொலைபேசிகூட கைவசம் இல்லை. யட்சிணி வேலை மாதிரி இன்டர்நெட் கனெக்ஷன் எப்படி வந்தது? தூக்கக் கலக்கம் போக கண்ணைக் கசக்கிக் கொண்டு யோசித்தபோது, மூளைக்குள் நூறு வாட்ஸ் பல்ப் எரிந்தது. 'வை-ஃபி'! டெலிஃபோன் சாக்கெட் தேடாமல், ஒயர் இழுக்காமல், இன்டர்நெட்டில் மேய பக்கத்துப் போர்ஷன்காரர் வாங்கி வைத்திருந்த Wi-Fi மின்வெளியில் என் லேப்டாப் நுழைந்திருந்தது.

தொண்ணூறுகளில் இன்டர்நெட் அதிரடியாக கம்ப்யூட்டர் உலகைக் கலக்க நுழைந்தபோதே, வை-ஃபிக்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டது. பிரபல தொழில் நிறுவனமான என்.சி.ஆர்., கம்ப்யூட்டர்களை வயர்லெஸ் மூலம் இணைத்து, கணக்கு வழக்குத் தகவல் பரிமாறிக்கொள்வதில் ஆரம்பித்தது வை-ஃபி. இதன் அடிப்படை சிம்பிள். அமெச்சூர் ஹாம் ரேடியோ, போலீஸ் வயர்லெஸ் மாதிரித்தான். இந்தச் சாதனங்கள் ஒலி அலைகளை மின் அலைகளாக மாற்றி காற்றில் பரவச் செய்த மாதிரி, கம்ப்யூட்டர் தகவலை மின் அலைகளாக மாற்றி, கம்பியில்லாமல் செய்தி அனுப்பிப் பெறுவது.

மின் அலைகள் மூலம் இப்படித் தகவல் பரிமாற, அங்கங்கே சின்னச் சின்னதாக வயர்லெஸ் சாதனங்கள். இவற்றைப் பிரதிஷ்டை செய்த இடங்கள் ஹாட் ஸ்பாட் என்று அழைக்கப்பட்டன. கம்ப்யூட்டரை இந்த ஹாட் ஸ்பாட்டில் இணைத்தால், வை-ஃபி ஜோதியில் கலந்துவிடலாம். அங்கங்கே பல கம்ப்யூட்டர்களை இப்படி வயர்லெஸ் மூலம் இணைப்பதோடு, பொதுவான இன்டர்நெட் சேவையும் தர வை-ஃபியால் முடியும். நாளாவட்டத்தில் கம்ப்யூட்டருக்குள்ளேயே செருகி வைத்து இணைப்பு ஏற்படுத்தும் ரவுட்டர் பலகையாக வை-ஃபி வடிவம் எடுத்தது. வயர்லெஸ் அலை பரப்பு வட்டாரத்துக்குள் இப்படியான கம்ப்யூட்டர் இருந்தால், இன்டர்நெட் வசப்படும்- எனக்கு அடுத்த வீட்டுக்காரர் தயவில் கிடைத்த மாதிரி.

வை-ஃபியின் பலவீனமும் இதுதான். பாதுகாப்பு குறைவு என்பதால், உத்தரவின்றி உள்ளே வரலாம். இரண்டு கம்ப்யூட்

# ஆளவந்த வை-ஃபி!

டர்களிடையே தகவல் பரிமாற்றம் நடக்கும்போது, வயர்லெஸ் பரப்பில் இருக்கும் வேறொரு கம்ப்யூட்டருக்கு அது போகக் கூடும். தொலைபேசியில் ஒட்டுக் கேட்பது போன்ற தகவல் திருட்டு இது. கம்ப்யூட்டர் துறைக்கே ஏற்பட்ட சாபக்கேடு காரணமாக, இந்தப் பூடக வழிமுறைகளையும் 'பூட்ட கேஸாக' செயலிழக்கச் செய்யும் மென்பொருளும் கூடவே உருவானது.

நம்ம நாட்டிலேயே விமானத் தளம், சென்னை சென்ட்ரல் போன்ற பெரிய புகைவண்டி நிலைய சந்திப்புகளிலும் கிட்டத்தட்ட எல்லா கம்ப்யூட்டர் தொழில்நுட்பக் கம்பெனிகளிலும் வை-ஃபி பரவலாக உபயோகத்தில் இருக்கிறது. அமெரிக்கா ஒரு படி முன்னால் போய், மொத்த ஊருக்குமே வை-ஃபி சேவையை அறிமுகமாக்கி இருக்கிறது. ஃப்ளோரிடா மாநிலத்தில் சான் கிளவுட் நகரம் இந்தப் பெருமையைத் தட்டிக்கொண்டு போனது. 'நான் ஆட்சிக்கு வந்தால் அமெரிக்கா முழுக்க இலவச வை-ஃபி' என்று ஹில்லாரியோ, ஒபாமாவோ தேர்தல் வாக்குறுதி கொடுத்திருக்கிறார்களா என்று தெரியவில்லை.

## வை-ஃபி

குறுகிய வயர்லெஸ் வளையத்தில் கம்ப்யூட்டர்களை இணைக்கும் லோ பட்ஜெட் படம் என்றால், வைமாக்ஸ் (WiMax) மெகா பட்ஜெட் சரக்கு. நாலு வருடங்களுக்கு முன்பாக சுனாமி பேரழிவு ஏற்பட்டபோது, இந்தோனேஷியாவில் தொலைத் தொடர்புகள் முற்றிலும் அழிந்துபோன சூழ்நிலை. பல நாடுகளிலிருந்து உதவிக்கரம் நீட்ட அங்கே விரைந்த தொண்டு அமைப்புகள், வெளி உலகோடு தொடர்பு கொள்ளவும் தீவிரமாகச் செயல்படவும் வைமாக்ஸ் தொழில்நுட்பம்தான் கை கொடுத்தது. ஆழிப் பேரலையும் அழிக்க முடியாதபடி விரிந்த, அலையகலத் தொடர்பு அது.





# ‘கரு’

ஜன்னல் வழியே அந்த மரத்தைப் பார்த்துக்கொண்டிருப்பது வீரய்யாவுக்கு மிகவும் பிடித்தமான விஷயம். அந்த அச்சகத்தின் அகன்ற பிரதானவாயிலை ஒட்டிய மண் ரோடு, அதையொட்டிய பெரியகுளம் கண்மாய்க் கரையில், கம்பீரமாய் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருந்தது அந்தக் கருவேல மரம்.

முட்களும் அதனிடையே சின்னச் சின்ன இலைகளும் பருவ காலத்தில் காய்த்துத் தொங்கும் காய்களோடு சேர்த்து, ஒரு வசீகரமான அழகையும் தன்னகத்தே கொண்டு விளங்குவதாகத் தோன்றும் வீரய்யாவுக்கு. மனத்தை மறைக்கத் தெரிந்த பெண்ணைப் போல, மழைக் காலத்தின் குளிர்ச்சியிலும் வெயில் காலத்தின் வெப்பத்திலும் தன்னை வேறுபடுத்திக் காட்டிக் கொள்ள விரும்பாததுபோல என்றென்றும் பசுமை மாறாமல் புன்னகையுடன் விளங்குவதாகத் தோன்றும்.

தாளை ரீம் கணக்கில் மடக்கித் தட்டி ஆஃப்செட் மெஷினில் ஏற்றும்போதும் சரி, மேட்டர் ரெடி செய்து மை ஃபீடிங் பார்த்து ஓடவிடும்போதும் சரி, மனதை ரிலாக்ஸ் செய்ய உதவும் நல்ல இசையைப் போல, அந்த மரத்தைப் பார்ப்பது ஒரு மாமருந்துதான் அவனுக்கு.

**- ஸ்வரமஞ்சரி**

அந்தப் பெரியகுளம் கண்மாய்க் கரையின் நெடுகிலும் பலவிதமான மரங்கள் வளர்ந்திருந்தாலும், இந்தக் கருவேல மரத்தின் நளினமும் அழகும் அவற்றுக்கு வராது. இந்தக் கருவேல மரத்தின் தோற்றம், ஒரு தேர்ந்த நடனமணியின் நாட்டிய முத்திரை போல அத்தனை அழகு! வீரய்யாவுக்கு இந்தக் கருவேல மரம் ஒரு வரையாத ஓவியம்தான்.

இந்த மரத்தை இந்தக் கோணத்தில் ஒரு புகைப்படம் எடுத்துவிட வேண்டுமென்று நிறைய தடவை யோசித்திருக்கிறான். சட்டெனக் கலையும் கனவுபோல, அந்த யோசனையும் நிகழ்கால நிகழ்வுகளில் மறந்து மறைந்துதான் போகிறது. புகைப்படம் எடுக்காவிட்டாலென்ன? ஒரு பென்சில் கொண்டு வரைந்து பார்த்தாலென்ன? அச்சகத்தில் வெள்ளைத் தாளுக்கா பஞ்சம். அந்தத் தருணமும் கூடி வந்து விட்டதுதான் போலும். திடீரென மின்சாரம் தடைபட்டுவிட்டது.

மெஷினிலும் வேறு அவசர வேலையில்லை. சுப்பிரமணியும் தங்கராசும் கட்டிங் செக்ஷனில்; ரெங்கசாமியும் கணேசனும் பண்டல்களில் அமர்ந்து சினிமாக்கதை மற்றும் வேறு கதைகள் பேச ஆரம்பித்தார்கள்.

ஒரு டபுள் கிரவுன் தாளை நான்காய் மடித்து ஒரு காலண்டர் அட்டையும் பென்சிலும் எடுத்துக்கொண்டு, நல்ல போசில் வரைவதற்கேற்ற கோணத்தில் அமர்ந்துகொண்டான். ஜன்னல் வழியே பார்த்த மாதிரி, அதே நாட்டிய பாவம் காட்டிற்று மரம்.

கிளைகளை முழுதாகக் காட்டாமல் மறைக்கும் இலைகளை, பென்சிலை ஒரு

# வேஷம்!

மாதிரி சாய்த்து வைத்துக்கொண்டு கோழி கிளறுவதைப் போல கிச்ச ஆரம்பித்தான்.

இப்போது நூற்றுக்கு நூறு சரியாக இல்லாவிட்டாலும், அதே மரம் அதே வளைந்து உயர்ந்து நெளிந்த நிலையில் பதிவாகியிருந்தது. அட, வீரய்யாகூட ஓவியனாகிவிட்டான். இனி இதை என்ன செய்வது? இவர்களிடம் காட்டலாமா, என்ன சொல்வார்களோ? முதலில் ரெங்கசாமியிடம்தான் காட்டினான்.

''அண்ணாச்சி, இதைப் பாருங்க... நல்லாயிருக்கா?''

''அட நல்லாயிருக்கே. கருவேல மரம் தானே இது!'' எதிலும் நன்மையை மட்டுமே பார்க்கும் மனசு அவருடையது.

கேட்டுக்கு நேரே நின்னு கொஞ்சம் சாயலா இருந்த மரத்தைப் பார்த்துட்டு, 'அட அதே மாதிரி வரைஞ்சிருக்கீங்களே. நல்லாயிருக்கு.'

''இப்போ எப்படியிருக்கு?''

''ம்... இப்பத்தான் படம் ஃபினிஷ் ஆன மாதிரியிருக்குண்ணே. இதை அப்படியே பிரஸ்ஸுக்குள்ளே ஜன்னல் பக்கத்துல ஒட்டி வெச்சிருங்க நல்லாருக்கும்'' சொன்ன கையோடு பசையுள்ள டேப்பைக் கிழித்து எடுத்து வந்து சுவரில் ஒட்டிவிட்டார்கள்.

கொஞ்ச நேரத்தில் முதலாளி வந்து விட்டார்.

''என்ன... கரெண்ட் இல்லியா?''

''ஆமாண்ணாச்சி...'' என்றார்கள் கோரஸாக.

''இன்னும் பத்து நிமிஷத்துல வந்துடும் அண்ணாச்சி'' என்றான் வீரய்யா.

''ம்...ம்...'' என்றபடி முதலாளி தனது இருக்கையில் போய் அமர்ந்தார்.

''தங்கராசண்ணே பார்த்துக்குங்க. பாத்ரூம் போய்ட்டு வந்துடறேன். கரெண்ட் வந்த பிறகு போக முடியாது.'' சொல்லிவிட்டு பாத்ரூம் என்று சொல்லப்பட்ட கண்மாய்ப் பக்கம் போனான் வீரய்யா.

**வீ**ரய்யா திரும்பி வந்த போது, மின்சாரம் வந்து மெஷின் ஓட ஆரம்பித்திருந்தது. அதோடு



சேர்ந்து ஒரு சிறிய மாற்றம் நிகழ்ந்தி ருந்ததையும் கவனிக்கத் தவறவில்லை வீரய்யா.

படம் ஒட்டிய இடத்தில் இப்போது அது இல்லை.

"அண்ணே என் படத்தை எங்கே...?" மெதுவாக விசாரித்தான்.

"அடப் போங்கண்ணே. நீங்க பாத்தும் போனவுடனே முதலாளி வந்து அந்தப் படத்தைப் பார்த்துட்டு, 'இந்தக் கிறுக்கலை என் இங்க வெச்சிருக்கீங்க? அவர் வீட்டுல வேணும்னா கொண்டு போய் ஒட்டிக் கட்டும்'னு கடுப்பா சொல்லிட்டா ருண்ணே."

'வேலைக்கு வந்திருக்கானா படம் வரைய வந்திருக்கானா?' என்றும் முதலாளி சொல்லி யிருக்கக் கூடுமென யூகித் தான் வீரய்யன்.

அச்சகத்தில் வேலை முடிய இரவு ஒன்பதாகி விட்டது. ஞாபகமாய் அந்தப் படத்தைச் சுருட்டி ஒரு பிளாஸ்டிக் பையில் போட்டு, சைக்கிள் ஹேண்ட் பாரில் மாட்டிக் கொண்டு கிளம்பினான்.

தெரு விளக்கு இல்லாத அந்த மண்சாலை இருட்டில், அவன் வாழ்க்கையைப் போல சைக்கிள் ஒரு அனுமானத்தில் ஓடிக்கொண்டிருந்தது.

'இந்தப் படத்தை வீட்டில் எங்கே ஒட்டி வைத்தால் நன்றாக இருக்கும். ம்.. சட்டை மாட்டப் படும் ஹேங்கரின் பக்கத்தில் சுவரில் ஒட்டிவிடலாம்.' வாசலில் நுழையும் எல்லோரையும் தன் வசம் பார்க்கச் செய்யும் இடம் அது.

சைக்கிளை வெளியில் நிறுத்தி விட்டு, அறைக்குள் நுழைந்து சட்டையைக் கழற்றி ஹேங்கரில் மாட்டியதும் வேட்டியிலிருந்து கைலிக்கு மாறியதும், அனிச்சையாய் நடந்தேறியிருந்தது.

* ஜெய்



# அமீரின் தவறான கணிப்பு

"எனக்கு இந்த 2008 மிக முக்கியமான வருடம்" என்கிறார் டைரக்டர் அமீர். "என் நண்பன் பாலாவின் 'நான் கடவுள்', எனது 'யோகி', என் சிஷ்யன் சசிகுமாரின் 'சுப்ரமணியபுரம்' ஆகிய மூன்று படங்களும் இந்த ஆண்டுதான் வெளிவரவிருக் கின்றன. யார், யாரை முந்தப் போகிறோம் என்று தெரிய வில்லை என்றாலும் மூன்று படங்களும் வெற்றிபெற வேண்டும்" என்றவர், 'சுப்ரமணியபுரம்' சசிகுமார் குறித்து ரொம்பவே கலாய்த்தார்.

"சில பேரை பார்த்த உடனேயே 'இவன் பின்னாடி பெரிய ஆளா வருவான்'னு நினைப்போம். அப்படி என்னை எப்பவும் நினைக்க வைக்காதவன், என் அசிஸ்டெண்ட் சசி. அவன் இப்படி படம் டைரக்ட் பண்ணுவான்னு நான் நினைக்கவே இல்ல. ஆனா, டைரக்ட் பண்ணுவாங்கன்னு நான் நினைச்ச பலர், இன்னும் படம் பண்ணலை. சசி எப்பவும் அமைதியாவே இருப்பான். எதுவும் பேச மாட்டான். 'உணர்வுகளைக் கொட்டாம நீ எப்படி படம் பண்ணப் போறே?'ன்னு நான் அவனை ரொம்பக் திட்டியிருக்கேன். ஆனா, அவன் இன்னைக்கு என்னையே கூப்பிட்டு 'சுப்ரமணியபுரம்' ஆடியோவை வெளியிட வெச்சிருக் கான்னா, அது பெரிய விஷயம். இது என் கணிப்புக்கு விழுந்த அடி" என்றார் அமீர்.

- கோகிலா

''பாபு, சைக்கிள்ல ஒரு பை இருக்கு எடுத்துட்டு வா...''

போர்வையை உதறிவிட்டு எழுந்தவன், ''பையில என்ன இருக்குப்பா...?''

''எடுத்துட்டு வா... சொல்றேன்...''

பிளாஸ்டிக் பையை ஒரு கையிலும் அதிலிருந்த பேப்பரை ஒரு கையிலும் பிடித்தபடி வேகமாய் வந்தான் பாபு.

''என்னடா?'' என்றாள் அம்மாவும் ஆர்வமாய்.

''மிக்சர் வாங்கிட்டு வந்திருக்கி யோன்னு நினைச்சேன். ஏதோ பேப்ப ரும்மா'' என்றான் ஏமாற்றமாய்.

''பேப்பரில் என்னயிருக்குன்னு பாருடா...'' என்றான் வீரய்யா ஆர்வம் குறையாமல்.

பேப்பரை விரித்து உற்றுப் பார்த்து விட்டு 'ஏதோ மரம் மாதிரியிருக்குமா' என் றான் சுவாரசியமில்லாமல்.

''நான் வரைஞ்சது. எங்க பிரஸ்ஸுக்கு எதிர்ல உள்ள கருவேல மரம். நல்லா யிருக்கா?''

'ம்ம்' என்ற முனகலோடு அப்பாவின் கையிலேயே வேண்டா வெறுப்பாகத் திணித்துவிட்டு டி.வி.யில் சுவாரஸியமாய் கண் பதித்தான் பாபு.

''நீ பாரு... எப்படியிருக்குன்னு சொல்லு.''

''இதை இதோ இங்க ஒட்டிடலாமா?'' ஆர்வம் பொங்க மனைவியைப் பார்த்தான்.

அவள் அதைப் பார்க்கும் உத்தேசத்தில் இல்லை. கழற்றிப் போடப்பட்ட அவன் சட்டையின் பையைத் துழாவிவிட்டு, ''என்னங்க, இன்னிக்கும் சம்பளம் போடலியா? வீட்டுக்காரம்மா இன்னிக்கு மூணு தடவை வாடகையைக் கேட்டுட் டாங்க'' என்றாள்.

''இன்னிக்கு முதலாளி சம்பளம் தரு வார்னு நினைச்சேன். அவர் தரலே...''

''ரெண்டு, மூணு தேதிக்குள்ள வாடகை கொடுக்க முடியலேன்னா பேசாம காலி பண்ணிக்குங்க'ன்னு தாட்சண்யமில்லாம வீட்டுக்காரம்மா சொல்லிட்டாங்க.''

''இன்னும் ரெண்டு நாளாகும். சனிக் கிழமைதான் அநேகமா கிடைக்கும்.''

''ஆபிஸ்ல யார் கிட்டேயாவது கேட்டுப் பார்க்கலாமில்லே.''

''தர்ற மாதிரி யாருமில்லே. எல்லாம் நம்மள மாதிரிதான்.''

அதற்கு மேல் அவள் எதுவும் பேச வில்லை. அவனுக்குச் சாப்பாடு பரிமாறி விட்டு படுத்துவிட்டாள். அவளின் எதிர் வினையற்ற மௌனமே, அந்த அறையில் பெருத்த சப்தமெழுப்புவதாகப் பட்டது அவனுக்கு.

இப்போது அந்தப் படத்தை எங்கே ஒட்டுவது என்ற நினைப்பே வரவில்லை. எல்லோராலும் ஏறக்குறைய புறக்கணிக் கப்பட்ட அந்த மரத்தைப் பார்த்தான் வீரய்யா.

அது அவனுக்கு மட்டும் புரியும்படியாக ஏதோ சொல்வதுபோலிருந்தது. ●

''நான் டாக்டரைத் திட்டினதை அவர் கேட்டுட்டார்!''

''அப்புறம்?!''

'' 'இன்சல்ட்டிங் ஃபீஸ்' வாங்கிட்டார்!''

- அனன்யா







ஒரு விஷயத்தின் மீதான அபிப்ராயம்தான் படைப்பு என்பது. அதில் நேர்மையும் உண்மையும் இருக்கும் பட்சத்தில், கலை அந்தஸ்து அடைகிறது.

விலை மதிப்பற்ற கலைப் பொக்கிஷங்களை, சகலரும் வாங்கும்படி கையடக்க விலைக்கு விற்கிறது வின்யாசா ப்ரிமியர் ஆர்ட் கேலரி.

மரபை மீட்டெடுக்கும் ஓவியங்கள், அயல்தேச பாணி ஓவியங்கள் என நம்மைச் சுண்டியிழுக்கும் இந்த விற்பனைக் கண்காட்சி, மயிலாப்பூர், சி.ஐ.டி. காலனி, முதல் முதன்மைசாலையில் ஜூன் 10ஆம் தேதி வரை நடக்கவுள்ளது.

50 ஓவியர்களின் சுமார் 150 ஓவியங்கள், ரசிக்கும்போது நம்மை தத்தெடுத்துக்கொள்கின்றன.

'நவீன ஓவியத்தை யார் வேண்டுமானாலும் வரைந்து விடலாம். ஆனால், அதை ஒரு நவீன ஓவியரால் மட்டுமே விற்கமுடியும்' என்ற யாரோ ஒருவரின் குரல் நினைவுக்கு வருகிறது. 'கலை நுட்பமும் உண்மையும் இருந்தால் யாருடையதையும் நாங்கள் காட்சிக்கு விற்பனைக்கு வைப்போம்' என்று உறுதியளிக்கிறார் இதன் அமைப்பாளர் விஜயலட்சுமி நாகேஸ்வரன். கண்காட்சியை விட்டு வெளியே வந்தால் வெயில்கூட ஓவியமாய் ஜொலிக்கிறது!

– **சசி**

படங்கள் :
**மணிமேகலை நாகலிங்கம்**

திண்டுக்கல் ஸ்டேஷனில் வண்டி நின்றது. 'சிறு மலை வாழைப்பழம்', 'சாம்பார் சாதம்', 'பிரியாணி' என்னும் கூக்குரல்கள் காதைத் தொளைத்தன. அந்த மனிதர் இறங்கி அவசரமாகப் போனார். பெட்டியை வைத்துத் தொலைத்துவிட்டுத் தான் போனார். அந்தப் பெண் ஒருவேளை இந்த வண்டியில் ஏறிக்கொள்ளலாம் என்று நினைத்தால், இந்தப் பெட்டி ஒரு தடையா யிருக்கலாமல்லவா? அவர் கூறியவற்றில் ஏதேனும் கொஞ்சமாவது உண்மையிருக்குமா? அந்தப் பெண்ணின் ஊர் கொழும்பு; அவள் பெயர் மனோகரி என்பவையேனும் நிஜமாயிருக்குமா?

அதிக நேரம் நான் யோசிக்க முடிய வில்லை. அவளே வந்துவிட்டாள். என் வண்டியின் அருகில் வந்து நின்றாள். நானும் மரியாதைக்காக கீழே இறங்

# ஒற்றை ரோஜா



அமரர் கல்கி

கினேன்.

''இங்கே ரயில் எத்தனை நேரம் நிற்கும்?'' என்று கேட்டாள்.

''ஐந்து நிமிஷந் தான் நிற்கும்.''

''அப்படியானால் என் சாமான்களை இங்கே ஏற்ற முடியாது. திருச்சினாப்பள்ளியில் தான் மாற்ற வேண்டும். இந்த வண்டியில் வந்து ஒருவர் ஏறினாரே? அவர் இறங்கிப் போவதைப் பார்த்தேன். அவர் என்னைப் பற்றி ஏதாவது சொன்னாரா?'' என்றாள்.

''ஆம், ஏதேதோ சொன்னார். அதையெல்லாம் நான் பொருட்படுத்தவில்லை.''

''அவர் என்னதான் சொன்னார்?'' என்று கேட்டாள்.

''உங்கள் ஊர் கொழும்பு என்றும், பெயர் மனோகரி என்றும் சொன்னார். உங்களை அவருக்குப் பழக்கம் உண்டு என்றும் கூறினார்.''

''அவ்வளவுவரை அவர் கூறியவை உண்மைதான். வேறு ஒன்றும் சொல்லவில்லையா?''

''இன்னும் ஏதோ உளறினார்! அதை

யெல்லாம் ஏன் கேட்கிறீர்கள்?''

''ஆமாம், என்னைப் பற்றி ஏதாவது அவதூறு சொல்லியிருப்பார். அதையெல் லாம் நீங்கள் நம்பாததற்காக ரொம்ப வந்தனம்! நான் பயந்தது உண்மை ஆயிற்று. அங்கே 'புஷ்கோட்' மனிதர்கள் மூன்று பேர், இங்கே ஸூட் போட்ட ஒருவர், ஆக, நாலு பேர் என்னைத் தொடர்ந்து இந்த வண்டி யில் வருகிறார்கள். நீங்கள்தான் எனக்கு உதவி செய்ய வேண் டும்!''

''எதற்காக உங்களைத் தொடர்ந்து வருகிறார்கள்? எதற்காக நீங்கள் பயப்பட வேண்டும்? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே?



3

உண்மையில் அபாயம் ஏற்படுவதாயிருந்தால், சும்மா இருந்து என்ன பயன்? ரயில்வே போலீஸாரிடம் சொல்லலாமே?'' என்றேன்.

''வேண்டாம், வேண்டாம்! போலீசாரிடம் மட்டும் சொல்ல வேண்டாம். அதைக் காட்டிலும்...''

இவ்விதம் கூறிய மனோகரி பேச்சை நடுவில் நிறுத்தி என் வண்டிக்குள் எட்டிப் பார்த்தாள். அங்கே வைத்திருந்த பெட்டி, அவளுடைய கவனத்தை அடியோடு கவர்ந்துவிட்டதாகத் தெரிந்தது. அதை உற்றுப் பார்த்துக்கொண்டே நின்றாள். அப்போது அந்த அழகிய பால் வடியும் முகத்தில் பீதியின் சாயை பரவியதைப் பார்த்தேன். எனக்கு அவளிடம் பரிதாபமும் உண்டாயிற்று; ஒருவித வியப்பும் உண்டாயிற்று.

''ஆமாம்; அது அந்த மனிதருடைய பெட்டிதான். பிற்பாடு வந்து எடுத்துக் கொள்வதாகச் சொல்லிவிட்டுப் போனார்!'' என்றேன்.

''திருச்சியில் உங்கள் வண்டியில் ஏறிக் கொள்ளலாம் என்று எண்ணியிருந்தேன். அதுவும் முடியாது போலிருக்கிறது'' என்றாள்.

''ஏன் முடியாது? அந்த ஆசாமி மறுபடி வந்தால் அவரை விரட்டியடித்து விடுகிறேன். அல்லது இரண்டு பேரும் வேறொரு வண்டியைப் பார்த்து ஏறுவோம்; மூன்றாம் வகுப்பில் வேண்டுமானாலும் ஏறிக்கொண்டு போவோம். நீங்கள் கொஞ்சங்கூடப் பயப்பட வேண்டாம். நான் இருக்கும்போது உங்களுக்கு ஒருவித அபாயமும் வருவதற்கு விடமாட்டேன்!'' என்றேன்.

''சரி, எல்லாவற்றுக்கும் திருச்சி ஜங்ஷனில் யோசித்துக்கொள்ளலாம்'' என்று சொல்லிவிட்டு, மனோகரி திரும்பி அவள் வண்டிக்குப் போனாள்.

''அரசே! எதிரி மன்னரிடம் நால் வகைப் படைகள் உள்ளன!''

''அதனாலென்ன! நம்மிடம்தான் கூலிப்படை இருக்கிறதே!''

- ஜி.லட்சுமிபதி



அவள் தலையிலிருந்த ஒற்றை ரோஜாப்பூ மீண்டும் என் கண்ணில் பட்டது. இந்தத் தடவை அது ஏதோ மர்மம் நிறைந்த பொருளாக எனக்குத் தோன்றியது.

பெட்டியை எடுத்துக்கொண்டு போக அந்த மனிதர் வரவேயில்லை. ரயில் புறப்பட்டுவிட்டது. கொந்தளிக்கும் கடலில் அலைகள் எழுந்து விழுவது போல், என் மனத்தில் எண்ண அலைகள் வந்து மோதின.

மனோகரியும் அவளைத் தொடர்ந்து அதே ரயிலில் வருவதாக அவள் கூறிய நாலு பேரும் அந்த அலைகளில் புரண்டு எழுந்தார்கள்.

ஏதோ ஒரு மர்மச் சூழலில் நான் சிக்கிக்கொண்டு விட்டதாகத் தோன்றியது. அது என்னவாயிருக்குமென்று எவ்வளவோ யோசித்தும் தலைகால் ஒன்றும் புரியவில்லை.

அந்தப் பெண் ஏதோ ஒரு சங்கடத்தில் சிக்கிக்கொண்டிருக்கிறாள் என்பது மட்டும் நிச்சயம். எது எப்படியிருந்தாலும் அவளுக்கு ஆதரவாக நின்று உதவி செய்ய

வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டேன். அந்த முயற்சியில் உயிரையே கொடுக்க வேண்டியிருந்தாலும் சரிதான். பாபநாசம் அருவியில் விழுந்து உயிர் துறந்து அநாதைப் பிணமாவதைக் காட்டிலும், இப்படிப்பட்ட ஒரு நிராதரவான பெண்ணுக்கு உதவி செய்து உயிரை விடுவது மேல் அல்லவா? ஒரு வேளை அதற்காகவேதான் கடவுள், பாப நாசத்தில் நம்முடைய புத்தியை மாற்றி அருளினாரோ என்னமோ? ஆனால், மனோகரி கொஞ்சம் நம்மிடம் அதிக நம்பிக்கை வைத்து எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னால், நம்முடைய அறிவைப் பூரணமாகப் பயன்படுத்தி, அவளுக்கு உதவி செய்யப் பார்க்கலாம். எல்லாவற்றுக்கும் திருச்சினாப்பள்ளி வரட்டும் பார்ப்போம். கேட்டால் சொல்லாமலா போகிறாள்? இப்படியெல்லாம் நான் எண்ணிக்கொண்டிருக்கையில் அந்த ஒற்றை ரோஜாப்பூ மட்டும் என் மனக்கண் முன்னால் இடைவிடாமல் தோன்றிக் கொண்டேயிருந்தது.

திருச்சி ஜங்ஷன் வந்தது. ஐந்தாம் நம்பர் பிளாட்பாரத்தில் இன்ன வண்டி வந்திருக்கிறது என்றும், ஆறாம் நம்பர் பிளாட்பாரத்திலிருந்து இன்ன வண்டி புறப்படப் போகிறது என்றும் ஒலிபெருக்கி அலறிக்கொண்டிருந்தது.

வண்டியிலிருந்து இறங்கி நின்றேன். என் கண்கள் இரண்டு பக்கமும் திரும்பித் திரும்பிப் பார்த்தன. பெட்டிக்கு உரிய மனிதர் வருகிறாரோ என்று ஒரு பக்கம் பார்த்தன; ஒற்றை ரோஜாப்பூவை இன்னொரு பக்கம் ஆவலுடன் எதிர்பார்த்தன.

முதல் வகுப்புப் பெண்கள் வண்டியிலிருந்து அவளுடைய முகம் எட்டிப் பார்த்தது.

பிறகு அவள் வண்டியிலிருந்து இறங்கினாள். பிளாட்பாரத்தில் அதிக வெளிச்சமில்லாத ஓர் இடத்துக்குப் போய் நின்றாள். அப்படியும் இப்படியும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

சற்றுநேரம் நான் பொறுத்துப் பார்த்துவிட்டு இறங்கிப்போனேன். அவளருகில்




**அவள் தலையிலிருந்த ஒற்றை ரோஜாப்பூ மீண்டும் என் கண்ணில் பட்டது. இந்தத் தடவை அது ஏதோ மர்மம் நிறைந்த பொருளாக எனக்குத் தோன்றியது.**

சென்று, "என்ன தீர்மானம் செய்தீர்கள்?" என்று கேட்டேன்.

"இன்னமும் யோசித்துக்கொண்டு தானிருக்கிறேன். ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை."

"எனக்கு என்னமோ, நீங்கள் அநாவசியமாகப் பயப்படுகிறீர்கள் என்று தோன்றுகிறது."

அப்படித்தான் எனக்கும் ஒரு சமயம் தோன்றுகிறது. இன்னொரு சமயம்... அந்த மூன்று புஷ்கோட் ஆசாமிகளை நினைத்தால் பயமாயிருக்கிறது."

"எதுவாயிருந்தாலும் இருக்கட்டும், உங்களுக்கு அப்படிப் பயமாயிருந்தால் என் வண்டியில் வந்து ஏறிக்கொள்ளுங்கள்..."

"வந்துவிடலாம். ஆனால், அந்தப் பெட்டிக்காரர் வந்து பெட்டியை எடுத்துக்

கொண்டு போய்விட்டாரா?''

''இன்னும் இல்லை.''

''அதனால்தான் யோசிக்கிறேன். வண்டி புறப்படும் சமயத்தில் அவர் திடீரென்று வந்து ஏறிக்கொண்டால்?''

''ஏறிக்கொண்டால் என்ன? நான் இருக்கும்போது?''

''அதைவிடப் பெண்கள் வண்டியில் நான் தனியாக இருப்பதே நல்லது.''

''உங்களுக்கு என்னதான் தோன்று கிறது? எதற்காக இவர்கள் எல்லோரும் உங்களைத் தொடர்கிறார்கள்? ஒரு காரண மும் ஊகிக்க முடியவில்லையா?''

''மதுரை ஜங்ஷனில் அவர்களுடைய பேச்சில் இரண்டொரு வார்த்தை என் காதில் விழுந்தது.''

''ஆ! அதிலிருந்து ஏதாவது ஊகிக்க முடிந்ததா?''

''ஏதோ விலை உயர்ந்த வைரங்களைப் பற்றிப் பேசிக்கொண்டார்கள். அவர்கள் சுங்க இலாகா அதிகாரிகள் என்று தோன்று கிறது. நான் ஏதோ வைரங்களை ஒளித்து எடுத்துப் போகிறேன் என்று அவர்கள் சந்தேகிக்கிறார்கள் போலிருக்கிறது'' என்றாள் மனோகரி.

இதைக் கேட்டு நான் சிரித்துவிட்டேன். மனோகரியும் சிரித்தாள்; அவள் சிரித்த அந்தச் சிரிப்பு, என் காதில் கிண்கிணி நாதமாக ஒலித்தது.

''என்ன முட்டாள்தனம்? நீங்கள்தான் அது விஷயத்தில் மிகப் பரிசுத்தமாக இருக்கிறீர்களே? ஒரு குன்றிமணி எடை தங்கமோ, ஒரு சிறிய மூக்குத் திருகு வைரமோ உங்கள் உடம்பில் இல்லையே? அதனாலேயே உங்களை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. மதராஸில் சில பணக்கார வீட்டு ஸ்திரீகள் உடம்பெல்லாம் வைர மாக வருகிறார்கள். அந்த அவலட் சணத்தைப் பார்த்துக் கூசிய என் கண் களுக்கு உங்களைப் பார்த்தால், சேச்சே! என்னமோ சொல்லிக்கொண்டு போகி றேன்!''

''எல்லாம் சரியாகத்தான் சொல்கிறீர்கள். பாக்கியையும் சொல்லி முடியுங்கள்! ஆ! அதோ...''

திரும்பிப் பார்த்தேன். என் வண்டிக்குப் பக்கத்தில் இருவர் வந்து நின்றார்கள். ஒருவர் பெட்டியை வைத்துவிட்டுப் போன வர். இன்னொருவர் புது மனிதர்.

பெட்டிக்குரியவர் இன்னொருவரிடம் ஏதோ சொன்னார்.



''மன்னிக்க வேண்டும். அப்படி நான் சொல்லவில்லை. தங்களைத் தேடிவருகிறவர்கள் மூடர்களாக இருக்கலாம் அல்லவா?''

இருவரும் சுற்றுமுற் றும் பார்த்தார்கள். பிறகு அங்கிருந்து அகன்றார்கள். பெட்டி வண்டிக்குள்ளேயே இருந்தது.

ஆர்வத்துடன் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த மனோகரி, ''நாலு பேருடன் இன் னொருவரும் சேர்ந்தாயிற்று!'' என்றாள்.

அவளுடைய அழ கிய முகத்தில் பீதி

ததும்ப அங்குமிங்கும் அவள் மிரண்டு பார்த்தபோது, நாலுபுறமும் வேடுவர்களால் சூழப்பட்ட மானின் மருண்ட பார்வை என் நினைவுக்கு வந்தது. சுற்றிலும் வலைகள் நெருங்கிவருவதை உணர்ந்த மீன், துவண்டு துடிப்பதைப் போல அவளுடைய நயனங்கள் துடித்துக் கொண்டிருந்தன.

எனக்கும் சிறிது கலக்கமாகத்தான் இருந்தது. ஆயினும் வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. அவளுக்குத் தைரியம் கூறவும் கூடுமான உதவி செய்யவும் விரும்பினேன்.

''ரயில்வே ஜங்ஷனில் எத்தனையோ பேர் வருவார்கள்; போவார்கள். எல்லோரும் உங்களைத் தேடுவதாக ஏன் எண்ணிக்கொள்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''காரணமில்லாமல் பயப்படும்படியான அவ்வளவு பெரிய அசடு என்று என்னைப் பார்த்தால் தோன்றுகிறதாக்கும்.''

''மன்னிக்க வேண்டும். அப்படி நான் சொல்லவில்லை. அவர்கள் - தங்களைத் தேடிவருகிறவர்கள், மூடர்களாக இருக்கலாம் அல்லவா?''

''அவர்கள் எல்லோரையும் மூடர்கள் என்று நான் ஒத்துக்கொள்ள முடியாது.''

''ஏன்?''

''அவர்களில் ஒருவர் என் தகப்பனார்!''

''என்ன? என்ன!''

''ஆமாம்; கடைசியாக வந்தவர் என் தகப்பனார். அவர் பெயர் எழுதிய பெட்டிதான் தங்கள் வண்டியில் இருந்தது. திண்டுக்கல்லில் இறங்கியவர் என் தகப்பனாரின் உதவிக்கு வந்தவராயிருக்க வேண்டும்.''

''எனக்கும் ஒன்றும் புரியவில்லை. கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டது போலிருக்கிறது. தங்கள் தகப்பனார் தங்களை எதற்காகத் தேடி வரவேண்டும்?'' என்றேன்.

''மகளிடம் தகப்பனாருக்கு இருக்கக் கூடிய வாஞ்சையினால்தான். 'நான் என் காதலனுடன் இந்தியாவுக்குப் போகிறேன். கவலைப்பட வேண்டாம்' என்று அப்பாவுக்குக் கடிதம் எழுதி வைத்துவிட்டு வந்தேன். உடனே புறப்பட்டு ஓடி வந்திருக்கிறார். இவ்வளவு சீக்கிரம் வந்துவிடுவார் என்று நான் நினைக்கவில்லை. ஆகாச விமானம் ஒன்று இருக்கிறது என்பதையே மறந்துவிட்டேன்.''




''தலைவர் இப்பல்லாம் எங்கே போனாலும் ஆம்புலன்ஸிலேயே போகிறாரே ஏன்?''

''டாக்டர் பட்டம் வாங்கினதிலிருந்தே இப்படித்தான்!''

- எம்.அசோக்ராஜா

ஆகாசம் இடிந்து என் தலையில் விழுந்ததுபோலிருந்தது. ஆனாலும் அதில் என்ன வியப்பு? இப்படிப்பட்ட அழகிக்கு ஒரு காதலன் இருப்பதில் வியப்பில்லைதான்! கொம்புத்தேனுக்கு முடவன் ஆசைப்பட்டு ஆவதென்ன?

''அப்படியானால், நான் விடைபெற்றுக்

கொள்ளட்டுமா?'' என்றேன். அப்போது என்னை அறியாமலே என் குரலில் ஒருவித ஏக்கம் தொனித்தது.

''நீங்கள் உதவி செய்வீர்கள் என்று நினைத்தேன். என்னைக் கைவிட்டுப் போகிறீர்களா?''

''நான் என்ன உதவி செய்ய முடியும்? உங்கள் தந்தையே வந்திருக்கும்போது?''

''ஓர் உதவி உங்களால் செய்ய முடியும்.''

''முடிந்தால் அவசியம் செய்கிறேன்.''

''சிறிது நேரத்துக்கு என் காதலனாக நடிக்க வேண்டும். அதாவது என் தந்தையின் முன்னிலையில்.''



இதெல்லாம் நிஜமாக நடக்கிறதா, அல்லது ஆங்கில நாவல் ஆசிரியர் வோட்ஹவுஸின் கதை படித்துக்கொண்டிருக்கிறேனா என்று எனக்குச் சந்தேகம் வந்துவிட்டது.

''முன்பின் காதலனாக நடித்து எனக்குப் பழக்கம் இல்லை. முயன்று பார்க்கிறேன். ஆனால் இதெல்லாம் எதற்காக? உங்கள் அசல் காதலன் எங்கே?''

''அசல் காதலனுமில்லை; அப்பீல் காதலனுமில்லை. அப்பாவுக்காக அப்படி வெறுமனே எழுதி வைத்துவிட்டு வந்தேன். இப்போது அதை உண்மைப்படுத்த வேண்டியிருக்கிறது. தங்களைத்தான் நம்பியிருக்கிறேன்.''

''நம்பினவர்களை நான் கைவிடுவதில்லை. என்னாலியன்ற உதவி செய்கிறேன். பரிசு என்ன தருவீர்கள்?''

''பரிசா? என்னிடம் என்ன இருக்கிறது கொடுப்பதற்கு?'' என்றாள் மனோகரி.

''தங்கள் தலையில் சூடியிருக்கும் ரோஜாப் பூவைக் கொடுத்தால் போதும். இன்றைய சம்பவத்தின் ஞாபகார்த்தமாக வைத்துக்கொள்வேன்.''

மனோகரியின் பால்வடியும் முகத்தில், ஒரு இலேசான நிழலின் சாயை படர்ந்ததைக் கவனித்தேன். அப்போது என் உள்ள நிறைவிலும் ஒரு கள்ளம் புகுந்தது. இவள் உண்மையாக அபாயத்தில் சிக்கிக்கொண்டிருப்பவள் தானா? அல்லது எல்லாம் வெறும் நடிப்பா? ஒரு பெரிய கபட நாடகத்தின் அங்கமா...?

மனோகரி அந்த ஒற்றை ரோஜாவைத் தன் கூந்தலிலிருந்து எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு, ''இது வெறும் வர்ணக் காகிதம். தங்களுடைய உதவிக்கு இதையா பரிசாகக் கொடுப்பது? தயவு செய்து மன்னியுங்கள். நான் மட்டும் பத்திரமாகச் சென்னைக்குப் போய்ச் சேர்ந்தால், புத்தம் புதிய மணமுள்ள ரோஜா மலர்களை வாங்கி, மாலையாகத் தொடுத்துத் தருகிறேன்!'' என்றாள்.

எனக்கு மெய் சிலிர்த்தது. அவள் தன்

தங்கக் கையினால் என் கழுத்தில் ரோஜா மாலை சூட்டுவதாகவே கற்பனை செய்து கொண்டு மகிழ்ந்தேன். உண்மை யாகச் செய்யட்டும். இவ்வளவு ரஸனையுடன் பேசும் பெண்ணுக்காக என்னதான் செய்யக்கூடாது?

''தங்களைப் பத்திரமாகச் சென்னை கொண்டுபோய்ச் சேர்ப்பது என் பொறுப்பு. சிறிதும் அதைப் பற்றிக் கவலை வேண் டாம்'' என்றேன்.

இப்படி நான் சொல்லிக் கொண்டிருக் கும்போதே ஏழெட்டுப் பேர் எங்களை நோக்கி வந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். அப்படி வருபவர்களில் இரண்டு பேர் போலீஸ்காரர்கள் என்பதும் தெரிந்தது.

எனக்கு திக், திக் என்று அடித்துக் கொண்டது. ஆயினும், பக்கத்தில் மனோ கரியிருப்பதை முன்னிட்டு மனத்தைத் தைரியப்படுத்திக்கொண்டேன்.

அவர்கள் எங்கள் அருகில் வருவதைப் பார்த்ததும் மனோகரி அவர்களை எதிர் கொள்பவளைப் போல் முன் நோக்கி நடந்தாள். நானும் சென்றேன். இருவரும் தூண் ஓரத்து நிழலிலிருந்து நல்ல வெளிச்சத்துக்கு வந்துவிட்டோம்.

கைப்பெட்டிக்காரர், என்னைப் போலீஸ்காரர்களுக்குச் சுட்டிக்காட்டினார். ''இந்த ஆள்தான்; இவனைக் கைது செய்யுங்கள்'' என்றார்.

''எதற்காக?'' என்று மனோகரி பெண் சிங்கத்தைப் போல் கம்பீரமாக முன்னால் நின்று கேட்டாள்.

''உன்னை உன் தகப்பனாருக்குத் தெரியாமல் ஏமாற்றி அழைத்து வந்ததற் காகத்தான்!''

''அது பொய்! நான் என் இஷ்டத்தினால் வந்தேன்.''

இப்படி அவர்கள் வாதமிட்டுக் கொண் டிருக்கும்போதே போலீஸார் இருவரும் என் இரு பக்கத்திலும் வந்து நின்று, ''மரியாதையாக வந்துவிடு!'' என்றார்கள்.

நானும் மரியாதையாக அவர்களுடன் நடந்தேன். போலீஸ் விவகாரங்களில் சிக்கி வழக்கமில்லாதவனாதலால் ஒரு பக்கம் திகிலாயிருந்தது; மற்றொரு பக்கத்தில் மனோகரிக்காக இதைச் செய்கிறோம் என்ற திருப்தியும் ஏற்பட்டது. சீக் கிரத்தில் இந்தக் குழப்பம் நீங்கிவிடும், நம்மைப் போலீ ஸார் ஒன்றும் செய்துவிட முடி யாது என்று திடப்படுத்திக் கொண்டு நடந்தேன்.

(தொடரும்)



**ஆகாசம் இடிந்து என் தலையில் விழுந்தது போலிருந்தது. ஆனாலும் அதில் என்ன வியப்பு? இப்படிப்பட்ட அழகிக்கு ஒரு காதலன் இருப்பதில் வியப்பில்லைதான்!**

# 33ஆம் பக்கத்துப் படங்கள் நிக்கோலஸ் நூலக காட்சிகள்!

''அடுத்த தலைமுறை குழந்தைகளுக்கு, புத்தகம் படிக்கும் வழக்கமே இல்லாது போய் விடும் என்பதை ஏற்றுக் கொள்ள மாட்டேன்.'' என்கிறார் இதன் நிர்வாகி சுயூ பிரின்டிவில்லி. ''சரியான வயதில் படிக்க வேண்டிய முறைகளையும், புத்தகங்களைக் கையாளும் வழிகளையும் சொல்லிக் கொடுத்து விட்டால், அந்த ஆரம்ப ருசியால் வாழ்க்கை முழுவதும் அவர்கள் புத்தகங்களை நேசத்தோடு படிப்பார்கள். இதை இந்த நூலகத்தின் மூலமாக வெற்றிகரமாகச் செயலாக்கிக் கொண்டிருக்கிறோம். இங்கு பாதம் பதிக்காத இந்நகரக் குழந்தைகள் யாருமில்லை'' என்று பெருமையாகச் சொல்கிறார். இது அமெரிக்காவின் நூலகங்களிலேயே நம்பர் ஒன் இடத்தைப் பெற்றுள்ளது.

சிகாகோ நகரிலிருந்து 30 மைல் தொலைவில் இருக்கிறது, நேப்பர்வில் என்ற சிறிய நகரம். நகரின் மக்கள்தொகை ஒரு லட்சத்துக்கும் சற்று கூடுதல். அவர்களுள் 75 சதவிகிதத்தினருக்கும் மேல் இதன் உறுப்பினர்கள் என்பது முதல் பிரமிப்பு. இந்த நூலகத்தைப் பற்றி மற்ற விவரங்கள்:






110 வயதை எட்டியிருக்கும் இந்நூலகத்தில், 7 லட்சம் புத்தகங்கள், பல ஆயிரக்கணக்கான டி.வி.டி., வி.சி.டி.க்கள் உள்ளன. கணினி மயமாக்கப்பட்டிருக்கும் இந்த நூலகத்தில் டிஜிட்டல் புத்தகங்களை உறுப்பினர்கள் தங்கள் வீட்டிலேயே கம்ப்யூட்டரில் டவுன்லோட் செய்து கொள்ளலாம். அந்த அளவுக்கு அல்ட்ரா மாடர்ன். தேவையான புத்தகங்களை நூலகத்தின் இணையதளத்தில் கேட்லாக் பார்த்து on line-ல் பதிவு செய்துகொள்ளலாம். எடுத்த புத்தகங்களை 'டிராப் பாக்ஸில்' போட்டு விடலாம். இப்படி வசதிகளை வாரி வழங்கும் இந்த லைப்ரரியின் உறுப்பின

# நகரமே காதலிக்கும் அழகி!

ராக கட்டணம், **எதுவுமில்லை - இலவசம்!**

நேப்பர்வில் நகர நிர்வாகத்துக்கு, ஏதாவது ஒரு வகையில் வரி கட்டுபவராக இருந்தால், இங்கு உறுப்பினராகலாம். ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கும் உறுப்பினர்களுக்கு, புத்தகங்களை அங்கேயே கொண்டு போய்த் தருகிறார்கள்.

அழகிய ஆற்றின் கரையில் பரந்த புல்வெளியில் அமைந்திருக்கும் நூலகத்தின் கண்ணாடிச் சுவரின் வழியே, ரம்மியமான நதியையும் கரையோர மலர்த் தோட்டங்களையும் ரசித்தபடியே படிக்கலாம். புல்வெளிகளிலும் அமர்ந்து படிக்க, பெஞ்கள். சும்மா இருப்பவர்களையும் படிக்கத் தூண்டும் சூழ்நிலை.

இந்த நூலகத்தில் வாரத்தின் 7 நாட்களிலும், 24 மணி நேரமும், எதைப்பற்றிக் கேட்டாலும் அந்தத் துறையைச் சேர்ந்த வல்லுனர்கள், உறுப்பினர்களுக்கு ஆலோசனை வழங்குகிறார்கள். பள்ளிக்கூடம் போவதற்கு முன்னரே குழந்தைகளுக்கு, ஒலிகளுக்கும் எழுத்துகளுக்கும் உள்ள சம்பந்தம், புத்தகத்தில் அச்சிடப்பட்டிருக்கும் எழுத்துகள், புத்தகங்களை வைத்துக்கொள்ள வேண்டிய முறைகள் போன்றவற்றைச் சொல்லிக்கொடுக்கிறார்கள்.

கடந்த ஆண்டு மட்டும் 7000 புத்தகங்கள் வாங்கியிருக்கிறார்கள். இந்த ஆண்டு இதுவரை கிட்டத்தட்ட நான்கு லட்சம் புத்தகங்கள் உறுப்பினர்களுக்கு சர்குலேஷனில் வழங்கியிருக்கிறார்கள்.

'நகரமே காதலிக்கும் அழகி' நிக்கோலஸ் நூலகம்!

கட்டுரை, படங்கள்: **ரமணன்**

# கடுதாசி



நீ அனுப்பிய
கடைசி கடுதாசியில்கூட
அன்புள்ளவில் தொடங்கி
மற்றவை நேரில் வரை
பரவிக்கிடந்தது;
என்மீதான உன்னுடைய
அறிவுரைகள் அடங்கிய
தாய்ப்பாசம்.
'புதன், சனி
எண்ணெய் தேச்சிக்குளி,
வேளாவேளைக்குச் சாப்பிடு,
வெய்யில்ல அதிகமா
அலையாத,
உடம்பப் பத்திரமா
பாத்துக்க'
உன் வார்த்தைகள்
இன்னும் என் நினைவில்...
என்னப் பத்தி
முதியோர் இல்ல முதல்வர்
யாரிடமோ பேசுறாரே...
என்ன அது...?
'உறவுக்காரங்கன்னு யாரும் இல்ல
தொண்ணூறு வயசு பிரம்மச்சாரி
உடம்பப் பொதச்சிடலாம்'

தஞ்சை சுகா.

த.கி.நீலகண்டன்

# அறம் செய்யக் கட்டளை!

இப்போதெல்லாம் தெருவுக்கு ஒரு கோயில் என்று முளைத்துக்கொண்டிருக்கிறது. புதுப்புது குடியிருப்புகள் தோன்றும்போது கூடவே புதுப்புதுக் கோயில்களும் தோன்றுகின்றன. தன் வசதிக்கு ஏற்ப கடவுளைத் தன் அருகிலேயே குடியேற்றி விடுகிறான் மனிதன்.

அந்த நாட்களில் கோயில்களைக் கட்டிய அரசர்களும் செல்வந்தர்களும் அவற்றின் பராமரிப்புக்குச் செய்த ஏற்பாடுகள் என்ன? கோயில்களின் அன்றாட தேவைகளுக்குப் பிறர் கையை எதிர் பார்க்காமல், அவை தன்னிறைவு பெற்ற அமைப்புகளாக விளங்க என்ன வழி செய்தார்கள்? இதில் அந்தந்த ஊர்மக்களின் பங்கு என்ன? பழைய சாஸனங்களிலும் கல்வெட்டுகளிலும் செப்புப் பட்டயங்களிலும் இவை பற்றிய



சுவாரஸ்யமான குறிப்புகள் இருக்கின்றன!

கோயில்களுக்கு நிலங்களும் ஆடு மாடுகளும் தானமாக வழங்கப்பட்டன. நிலங்களிலிருந்து விளையும் நெல், கோயிலைச் சார்ந்த அனைத்து செலவுகளுக்கும் வழி வகுத்தது. பணியாளர்கள் அனைவருக்கும் சம்பளமாக நெல்தான் வழங்கப்பட்டது. அபிஷேகத்துக்குரிய பாலும், விளக்குகளுக்கு நெய்யும் கிடைக்க ஆடு மாடுகள் உதவின. நித்யபடி பூஜைகளுக்காகவும், விசேஷ நாட்களில் நடக்கும் பூஜைக்காகவும், உத்ஸவ காலங்களில் நடக்கும் பூஜைக்கும், வீதிஉலா, அலங்காரம், மேளதாளம் ஆகிய செலவுகளுக்கும் வழி வகுக்க பொன்னும் வெள்ளியும் நிவந்தங்களாக அளிக்கப்பட்டன. இவற்றைப் பதிவு செய்து வைத்த சில சாஸனங்களைப் பார்ப்போம்.

திருவண்ணாமலையில் உறையும் அண்ணாமலையாருக்கு முன்னுள்ள



**'திருவண்ணாமலை நாயனார் பால் ஆடி அருள சுரவித் திருமேனி வசமே சந்திராத்த வரையும் ஆடி அருள விட்ட பசு 254' என்று சாஸனம் பதிவு செய்திருக்கிறது!**

அணையாவிளக்குக்காக (நந்தா விளக்கு என்பது நொந்தா விளக்கு என்று எழுதப்பட்டிருக்கிறது) கி.பி.922ல் முதலாம் பராந்தக சோழன் எழுதிவைத்த சாஸனம் இருக்கிறது.

'.......திருவண்ணாத்து மஹா தேவர்க்கு ஒரு நொந்தா விளக்கினுக்கு வைத்த சாவா மூவாப் பேராடு தொண்ணூறு' என்று அந்த சாஸனம் தெரிவிக்கிறது. கி.பி.1275ல் குலசேகர பாண்டியன், அதே அண்ணாமலையாருக்கு நாள்தோறும் அபிஷேகத்துக்கான பாலுக்காக பசுக் கூட்டங்களைத் தானமாகக் கொடுத்து இருக்கிறான். 'திருவண்ணாமலை நாயனார் பால் ஆடி அருள கரவித் திருமேனி வசமே சந்திராத்த வரையும் ஆடி அருள விட்ட பசு 254' என்று இந்த சாஸனம் பதிவு செய்திருக்கிறது!

'சந்திராதித்தர் வரை', 'சாவா மூவாப் பேராடு' போன்ற தொடர்களைக் கவனிக்க வேண்டும். இத்தகைய தருமங்கள், சந்திர சூரியர்கள் உள்ளவரை, நடைபெற வேண்டும் என்ற நோக்கில் தானங்கள் செய்யப்பட்டிருக்கின்றன! ஆடுகளும் மாடுகளும் எப்படிச் சாகாமலும் மூப்பு அடையாமலும் இருக்கும்? எதற்காக சாவா... மூவாப் பேராடு என்று எழுதி வைத்தார்கள்? ஆடுமாடுகள் நன்கு பராமரிக்கப் பட்டு, அவை மேன்மேலும் விருத்தியாகி அதன் மூலம் தலைமுறை தலைமுறையாக இந்தத் தருமங்கள் நடக்க வேண்டும் என்பதே இதன் பொருள்.

கோயிலுக்கு நிலங்களை எழுதி வைத்த அரசர்கள், அந்த நிலங்களில் கிடைக்கும் வருவாய்க்கு வரிவிலக்கும் அளித்திருக்கிறார்கள். அந்த நிலங்களைப் பாதுகாக்கும் பொறுப்புக்கும் ஆட்களை



நியமித்திருக்கிறார்கள். மதுராந்தகன் உத்தம சோழனின் கி.பி.983ஆம் ஆண்டைய கல்வெட்டு, இந்தச் செய்தியைத் தெரிவிக்கிறது!

வேதம் ஓதும் அந்தணர்கள் தேவாரம் பாடும் ஓதுவார்கள் என்று தொடங்கி, கோயிலைச் கத்தம் செய்வோர், கோலமிடுவோர், நந்தவனம் பராமரிப்போர், குளங்களைப் பராமரிப்போர், சாமரம் போடுபவர், மணியடிப்பவர், கோயிலைச் சார்ந்த தேவதாசிகள், நாயனக்காரர், மேளக்காரர் என்று ஒரு பெரும் மக்கள் திரளே கோயிலை நம்பி வாழ்ந்து வந்தது தெரிய



வருகிறது. பணியாளர்கள் அனைவரும் சம்பளமாக நெல்பெற்று வந்ததோடு, கோயிலில் செய்யப்படும் நைவேத்தியத்திலும் அவர்களுக்குப் பங்கு இருந்தது.

'..... இவர் அத்தனை பேரும், பேர் ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு நாழி சோறு பெறக் கடவார்கள்' என்று எழுதி வைத்திருக்கிறார்கள். அவர்கள் வீட்டு நல்லது பொல்லாதது ஆகியவற்றுக்கும், வீட்டுக்கு வெள்ளையடித்துக்கொள்வதற்கும்கூட வழிவகை செய்திருக்கிறார்கள்! இன்றைய கார்ப்பரேட் மொழியில் சொன்னால், 'ஸாஃப்ட் பெர்க்ஸ்'!

பெரும்பாலான சாஸனங்கள், இந்தத் தர்மங்களை விவரித்ததோடு 'இது ரக்ஷிப்பார் அடிநிலை எங்கள் தலைமேல்' என்றும் கூறுகின்றன. தாங்கள் ஏற்படுத்திய இந்த அறக்கட்டளைகளை, காத்து நிறைவேற்றுபவர்களின் பாதங்களைத் தம் தலைமேல் சூடுவார்களாம் இந்த தர்மவான்கள்! அதே சமயம், இத்தகைய தர்மங்களுக்குத் தீங்கு விளைவிப்போர் 'கங்கை இடை குமரியிடை எழுநூற்று காதமும் செய்த பாவம் கொள்வார். கங்கைக் கரையில் கபிலையும் (பசு) பிராமணனையும், மாதா பிதாவையும் குருவையும் கொன்ற தோஷத்திலே போகக் கடவான்' என்றும் பயமுறுத்துகிறது ஒரு சாஸனம். பெரும்பாலும் எல்லா சாஸனங்களும், அவற்றைப் பராமரிப்பவர்களுக்குப் புண்ணியமும், தீங்கு செய்தவர்களுக்குப் பாவமும் சம்பவிக்கும் என்று எச்சரிக்கை செய்கின்றன! பாவ புண்ணியங்களுக்குப் பயந்து மக்கள் வாழ்க்கை நடத்திய காலம் அது! இன்று பாவ புண்ணியத்துக்கு அர்த்தம் மாறிவிட்டதை என்ன சொல்ல?

நன்றி : பூசை ச. அருணவசந்தனின் சிவமஞ்சரி 8ஆம் பாகம்

# வேதரக்ஷணம்!

முன் தலைமுறைக்காரர்கள், என்ன செய்திருக்க வேண்டும் என்பதைப் பற்றி இப்போது சொல்லிப் பிரயோஜனமில்லை. அவர்கள் லோகத்தைவிட்டே போய்விட்டார்கள். அவர்கள் என்ன செய்திருக்க வேண்டும் என்கிறேனோ, அதையேதான் இன்றைக்கு உள்ளவர்களுக்கும் சொல்கிறேன்.

அதாவது, செத்தாலும் ஸ்வதர்மத்தை விடக்கூடாது. இப்போது மட்டும் சாகாமல் இருக்கப் போகிறோமா என்ன? பணத்தை நிறையச் சேர்த்துக்கொண்டு, ஆனால் அதைவிட நிறைய அவமானத்தைச் சேர்த்துக்கொண்டு, மற்றவர்களின் அசூயைக்குக் காரணமாக இருந்துகொண்டு, நமக்கான தர்மத்தை விட்டுவிட்ட பிரஷ்டர்களாகச் சாகப்போகிறோம். இதைவிட சாப்பாட்டுக்கு இல்லாவிட்டாலும், நம் கடமையைச் செய்தோம் என்று, மூச்சு இருக்கிற மட்டும் பட்டினி கிடந்தாவது வேதரக்ஷணத்தைச் செய்து சாவது பெருமைதானே? இப்படிச் செய்வதால், மற்றவர்கள் நம்மை பூஷிக்கட்டும் அல்லது தூஷிக்கட்டும் - அதைப் பற்றி நமக்கு என்ன வந்தது? யாருக்கும் போட்டியாக இல்லாதவரை நம்மைக்கண்டு நிச்சயம் யாரும் அசூயை, பொறாமை, வயிற்றெரிச்சல் படமாட்டார்கள் அல்லவா? காலத்துக்கு ஒவ்வாத அசட்டுப்பிச்சுக்கள் என்று கேலி வேண்டுமானால் செய்வார்கள்; அல்லது பரிகசிப்பார்கள். பண்ணிவிட்டுப் போகட்டுமே. இப்போது மட்டும் குறைச்சலாகவா பரிகாசத்துக்கு ஆளாகி வருகிறோம்? நம் தர்மத்தை விட்டு ஊர் சிரிக்கிற நிலையில் வயிறு வளர்ப்பதைவிட, தர்மத்தைச் செய்துகொண்டு ஊர் சிரித்தாலும் சிரிக்கட்டும் என்றுதான் இருக்கலாமே, அல்லது சாகலாமே!

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# சுமைதாங்கி

ஆர். லதா

மூர்த்தி தன் மனைவி சுகந்தியிடம் சண்டை போட்டுக்கொண்டிருந்தது பக்கத்து வீட்டு அலமேலுவுக்கு நன்றாகக் கேட்டது.

''சனியனே! தரித்திரம், சட்னில உப்பும் இல்லை ஒரு எழவும் இல்லை. இட்லிய வாயில வைக்க முடியுதா? பொணத்துக்கு வச்சு படைக்கறாப்புல எல்லாத்துலயும், அரை உப்பும், கால் உப்பும்... ச்சை! மனுஷன் சாப்புடுவானாடி இந்தக் கருமத்தை? உப்பு போட்டு சாப்டாதான் உடம்புல சொரணை இருக்கும். அது உனக்கெங்கே தெரியப் போகுது? உன் வம்சத்துக்கே சூடு, சொரணைன்னா, விசை என்ன விலைம்பீங்க! உப்பு போட்டுச் சமைக்கக்கூடத் தெரியாம, துப்பு கெட்ட குடித்தனம் பண்றியா? சனியனே! மீதிய நீயே கொட்டிக்க!'' என்று அரைகுறை பசியோடு கோபமாய்க் கொட்டித் தீர்த்து விட்டு புறப்பட்டுச் சென்றான் மூர்த்தி. ஒரு வாரமாய் இதே கதைதான். மூர்த்தி இப்படி ருத்ர மூர்த்தியாய் சாமியாடிவிட்டுப் போனவுடன், மனசு கேட்காமல் அலமேலு அங்கே சென்றாள்.

சுகந்தி அமைதியாய் வீடு கூட்டிக் கொண்டிருந்தாள்.

''ஏண்டி, நானும் பார்க்கறேன், கொஞ்ச நாளா உன் புருஷன் இந்த ஆட்டம் ஆடறானே? உப்பு போறாத விஷயத்துக்கு இந்தக் கத்து கத்தறானே? நீயும்தான் ஆகட்டும், உப்பைக் கொஞ்சம் பார்த்துப் போடமாட்டாயா?''

''இல்லக்கா, அவருக்கு ரத்த அழுத்தம் இருக்கு. உப்பைக் கொறைக்கச் சொல்லி டாக்டர் போன வாரம் சொன்னாரு. அதான் கம்மியாப் போட்டேன்'' என்றாள் சுகந்தி.

''சரி அவன்ட்ட சொல்ல வேண்டியதுதானே?''

''நல்லா உப்பு உறைப்பா சாப்பிட்ட வருக்கு, கொஞ்ச நாள் பழகற வரைக்கும் கஷ்டமா இருக்கும்; கோபம் வரும்; ஆத்திரம் தலைக்கு ஏறும்; வெறுப்பும் ஏமாற்றமும் குமையும். அத்தனை எரிச்சலையும் ஒட்டு மொத்தமா யார் மேலயாச்சும் காட்டினாத் தான் தீரும். அதுதான் வடிகாலாட்டம் நான் எல்லா வசவையும் வாங்கிக்கறேன்!''

''ஏண்டி உனக்கென்ன தலையெழுத்தா?''

''இல்லக்கா... அவருடைய டிரைவர் வேல, அவ்வளவு டென்ஷனான வேல. நான் ஏதாவது எதுத்துப் பேசினா, சண்டை பெரிசாகும். அதே படபடப்புல இவரு வண்டி ஓட்ட ஆரம்பிச்சா கவனம் சிதையும். ஒண்ணு கிடக்க ஒண்ணு ஆச்சன்னா, ஒரு நூறு உயிருக்காச்சும் ஆபத்தில்லையா? அதான் கொஞ்ச நேரம் கோபத்தை நான் தாங்கிக்கறேன். லேசான மனசோட அவரு வேலையைப் பார்க்கட்டும்!'' என்றபடி, தன் வீட்டு வேலையை மீண்டும் துவங்கினாள் சுகந்தி.



# சர்ச்சை


★ பொன்னீலன்


★ ச.விஜயலட்சுமி

# ஆண்-பெண்

'சண்டையும் சச்சரவும் புலவர்களின் பரம்பரை சொத்து. அதை மாற்ற யாராலும் முடியாது'. 'திருவிளையாடல்' படத்தில் புலவனாக வரும் இறைவன் பேசுகிற வசனம், இலக்கிய உலகில் எல்லா காலத்துக்கும் பொருந்தும் போலும்.

'எப்போதும் ஏதேனும் ஒரு சர்ச்சையைக் கிளப்புவதும் விவாதிப்பதும் தனித் தனிக் குழுவாகச் செயல்படுவதும் தொடர்ந்து நடந்து கொண்டே இருப்பதுதான்.

ஆண்கள், பெண்களின் பெயரைப் புனை பெயராகக் கொண்டு எழுதுவது நமக்குத் தெரிந்த செய்திதான். சமீபத்தில் இந்திரா பார்த்தசாரதி, கலாப்ரியா, தேவிபாரதி, அம்சப்ரியா, பூமா வாசுகி, சுபா - இப்படி சுமார் 30 பேர் தமிழில் பெண் பெயரில் எழுதுவதாகவும் இனி இவர்கள் இப்படி பெண் பெயரில் எழுதக்கூடாது; இப்படி எழுதுவதால் பெண்களின் 'இருப்பு' அழிகிறது; பெண் எழுத்து அழிக்கப்படுகிறது என்று குற்றம் சாட்டப்பட்டது. ஒரு கட்டத்தில் **கவிஞர் மாலதி மைத்ரி,** "பெண் பெயரில் எழுதும் ஆண்கள், அரசு மருத்துவமனையில் அரவாணிகளுக்குச் செய்யப் படும் அறுவை சிகிச்சையைச் செய்து கொண்டு பெண்களாக மாறி, தங்கள் எழுத்துப் பணியைத் தொடரட்டும்" என்ற காட்டமான கிண்டலைத் தொடர்ந்து... இணைய இதழ்களிலும் பல்வேறு வாத, பிரதிவாதங்கள் மோதிக்கொள்கின்றன.

இந்தச் சர்ச்சை பற்றி வேறு சில கவிஞர்கள் எழுத்தாளர்களிடம் கருத்து கேட்டதில் **கவிஞர் தமிழ்மணவாளன்,** "பெண் பெயரை புனைபெயராக வைத்துக்கொள்வது, அப்பெயரின் மீதோ அல்லது அப்பெயர் கொண்ட நபர் மீதோ உள்ள அபிமானமாகவே கருத வேண்டும். பாரதி என்பதுகூட பெண் தெய்வத்தின் பெயர்தான் (தற்போது அது பொதுப் பெயர்). விண்முட்ட பெண்ணுரிமைக் குரலை உயர்த்திப் பேசிய பாரதி, ஒரு போதும் இவ்விமர்சனத்தை நினைத்துப் பார்த்திருக்கமாட்டான்.

பெண்கள், கணவர்களின் பெயரைத் தூக்கிச் சுமந்தபோது, மனைவியின் பெயரை முன்வைத்து எழுத வந்ததைக் (சுஜாதா போன்றோர்) கொச்சைப்படுத்துவது சரியல்ல. மேலும் பெண்களின் இருப்பு, பெயரில்தான் இருக்கிறதா? பெண்களுக்கான பெயரெல்லாம் ஆண் மைய பார்வையில் உருவானதுதானே? இந்தப் பெண் பெயர்களையும் மறுதலித்து, பொதுப் பெயர்களுக்கு நகர்வதுதான் விடுதலை முன்னகர்வு. அறுவை சிகிச்சை செய்து கொள்ளுங்கள் என்று கிண்டலடிப்பது பெண்களை மட்டுமல்லாது ஆண்களையும் உடல் சார்ந்தே அணுகுகிற அபத்தம்; ஆண் என்பதன் அடையாளம் அது மட்டுமல்ல" என்கிறார்.

**கவிஞர் ச.விஜயலட்சுமியோ,** "பிரபலமான சுஜாதாவை விட்டுவிடுங்கள். பிரபலமாகாத கருணா திவாகர் என்ற பெயர் ஆணா பெண்ணா...? குழப்பம் வருமா? வராதா? வருங்காலத்தில் ஆய்வு மாணவர்களுக்கு, இந்தக் குளறுபடி குழப்பம் நேராதா? அதிகம் எழுதாத பெண்களின் வெற்றிடத்தை ஆண்கள் பகிஷ்கரித்துக்கொள்வதை இனி ஏற்க முடியாது. பெண்ணுக்குப் பெண்ணையே எதிராக்கும் முயற்சிதான் இது" உக்கிரம் குறையாமல் ஆவே

* தமிழ்மணவாளன் * மாலதி மைத்ரி





வெறும் பெயரை வைத்துப் பேசக் கூடாது. பால் பேதத்தை நீக்குகிற முயற்சியில் நிறையப் போராடிக் கொண்டிருக்கும் இக்காலத்தில் சமத்துவத்தை நோக்கிப் பயணப்படும் போது, இந்தப் பிரிவினைக்கான சர்ச்சை அவசியமற்றது. மேலும் இது சர்ச்சையே அல்ல. நீர்த்துப்போன

# பெயரில் எழுதலாமா?

சப்படுகிறார்.

சாகித்ய அகாடமி பரிசு பெற்ற மூத்த **எழுத்தாளர் பொன்னீலனை** இது பற்றிக் கேட்டபோது, ''ஆணுக்கும் பெண்ணுக்குமான பொதுவான பெயர்கள் அதிகம் உண்டு; குட்டி, ப்ரியம் என்றெல்லாம் நிறைய இருக்கின்றன. 'சிக்கலான' இடங்களில் உட்கார்ந்து இருக்கக்கூடிய எழுத்தாளர்கள், தங்களை மறைத்துக்கொள்வதற்கு மட்டுமல்ல - தாங்கள் நேசிக்கிறவர்களைப் பெருமைப்படுத்தவும்தான் இந்தப் புனைபெயர். ஒருவருடைய எழுத்து, பெண்களுக்கு எதிராக இருக்கிறதா என்பதை மட்டுமே பார்க்க வேண்டுமே ஒழிய, எழுத்தாளர்கள் தங்களை வெளிச்சம்போட்டுக் காண்பிக்க நடத்துகிற முயற்சி'' என்று சாட்டையைச் சுழற்றியிருக்கிறார். சர்ச்சை தொடர்கிறது - தீர்ப்புகள் ஒத்திவைக்கப்படுகின்றன. கல்கி வாசகர்களே, என்ன நினைக்கறீங்க? சும்மா தைரியமாச் சொல்லுங்க.

- அமிர்தா



## மீண்டும் கிரிக்கெட்!

ஆறு கதாபாத்திரங்களை மட்டுமே சுற்றி நடக்கும் சம்பவங்களைக் கதையாகக் கொண்ட முதல் தமிழ்த் திரைப்படம் 'பத்து பத்து'.

இந்தியா - பாகிஸ்தான் ஒன் டே கிரிக்கெட் மேட்ச் இரவு - பகல் என நடந்துகொண்டிருக்க, சரியாக இரவு பத்து பத்துக்கு ஒரு சம்பவம் நடக்கிறது. அந்தச் சம்பவத்தில் சம்பந்தப்படாத ஆறு பேர் பாதிக்கப்படுகின்றனர். அந்தச் சம்பவத்தை நிகழ்த்தியது யார்? எதனால் நிகழ்ந்தது? கடைசியில் யார் அந்தக் குற்றவாளி... என படம் முழுக்க சஸ்பென்ஸ் கலந்த த்ரிலாக வந்திருக்கிறது. கிரிக்கெட் ரசிகர்களுக்கு இந்தப் படம் கொண்டாட்டமாக அமையும். நேரம் பத்து பத்தை நெருங்க நெருங்க, படத்தின் திரைக் கதையிலும் வேகமெடுக்க ஆரம்பிக்கும்'' என்கிறார் இப்படத்தின் இயக்குநர் ஸத்யம். இந்தியன் ட்ரீம் மேக்கர்ஸ் தயாரிக்கும் இந்தப் பட்த்துக்கு பழம் பெரும் இசையமைப்பாளர் எல்.வைத்தியநாதனின் மகன், எல்.வி. கணேசன் இசையமைக்கிறார்.

- பெனினா



# 'சுகம்', சுகமறிய ஆவல்...

**ஒரு குடம் தண்ணீருக்காக கால் கடுக்க நடக்கும் பெண்கள் இன்னமும் உள்ள தமிழகத்தில் தான் குடி தண்ணீர் உற்பத்தியில் வெற்றி கண்டு வருகிறது இந்த மகளிர் சுய உதவிக் குழு!**

பெரிய நிறுவனங்களே ஈடுபட்டு வரும் 'பேக்கேஜ்டு ட்ரிங்கிங் வாட்டர்' தொழிலில், மகளிர் சுய உதவிக் குழுக்கள் இறங்கிச் செயல்பட்டு பெரும் வெற்றி கண்டுள்ளன. கோவை, மேட்டுப்பாளையம் அருகே ஓடந்துறை ஊராட்சிக்கு உட்பட்ட, ஊமப்பாளையம் கிராமத்தில் இயங்கி வருகிறது 'சுகம்' பேக்கேஜ்டு ட்ரிங்கிங் வாட்டர் தொழிற்சாலை.

''முதலில் கேன்களின் வெளிப்புறமும் உட்புறமும் கழுவிச் சுத்தம் செய்வோம். பின்னர் குழாய் மூலமாக அதி வேகமாகப் பீய்ச்சியடிக்கப்படும் தண்ணீரில் கேன்களின் உட்புறத்தினைக் கடைசியாகச் சுத்தம் செய்வோம். இதற்கும் நாங்கள் சுத்திகரிக்கப்பட்ட தண்ணீரையே பயன்படுத்துகிறோம்!'' என்கிறார் கேன்களைச் சுத்தம் செய்பவர்களில் ஒருவரான மாரியம்மாள்.

''சுத்தம் செய்யப்பட்ட நீரைக் கேன்களில் நிரப்புவது எனது வேலை. இதுக்கு நாங்க தொப்பி அணியணும். வாய், மூக்குக்கெல்லாம் மறைப்புக் கட்டிக்கணும். கையுறை அணிஞ்சுக்கணும். அத்தினி சுத்தமா இருக்கணும். மாசத்துல பதினஞ்சு நாள் கம்பெனிக்கு வந்துடுவேன். பாக்கி நாள்ல காட்டு வேலைக்குப் போயிடுவேன். பத்தாவது வரைக்கும் படிச்சிருக்கேன். காட்டுல கூலி வேலைக்குப் போறதைவிட, இங்க வந்து வேலை செய்றது மனசுக்கு உற்சாகமா இருக்கு. இந்தக் கம்பெனி வளர்ச்சியில எங்க ஒவ்வொருத்தருக்கும் பங்கு இருக்குல்லே!'' எனக் கூறுகிறார் கவிதா.

''பதினைந்து லட்ச ரூபாய் வங்கிக் கடன்ல நாங்கள் தொழில் தொடங்கி இரண்டு வருடங்கள் ஆயிடுச்சு. கடனை ஓரளவு திருப்பி அடைத்து வருகிறோம். ஐ.எஸ்.ஐ. தரச் சான்றிதழ் பெற, குடிநீர்



* கவிதா



* விஜயலெட்சுமி

தரக்கட்டுப்பாடு ஆய்வக மற்றும் நிர்வாகச் செலவுகள் தொடர்ந்து இருந்து வருகின்றன. எங்களின் உற்பத்தி அதிகரித்து மார்க்கெட்டிங் விரிவாகும்போது வங்கிக் கடனை எளிதில் அடைத்துவிடுவோம்!'' என நம்பிக்கை தெரிவிக்கிறார் ஒடந்துறையைச் சேர்ந்த திட்டப் பொருளாளர் விஜயலெட்சுமி.

''பவானி ஆற்று நீர், ஆழ்குழாய் மூலமாக இங்கு வந்து சேர்கிறது. மணல் சல்லடை வாயிலாக அந்தத் தண்ணீரின் கழிவுகள் நீக்கப்படுகின்றன. கார்பன் ஃபில்டரில் அதன் துர்நாற்றம் அகற்றப் படுகிறது. மிக நுண்ணிய மைக்ரான் ஃபில்டருக்குள் அதிக விசையுடன் தண்ணீர் செலுத்தப்படுகிறது. அங்கு தண்ணீரில் உள்ள பாக்டீரியாக்கள் செயலிழக்கச் செய்யப்படுகின்றன. ரிவர்ஸ் ஆஸ்மாஸிஸ் சுழற்சியில் தண்ணீரின் கடினத்தன்மை குறைக்கப் பட்டு, மேலும் மென்மையான நன்னீராக மாற்றப்படுகிறது.

இவ்விதம் சுத்திகரிக்கப்பட்ட தண்ணீர் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டேங்குகளில்



* கோமதி

சேகரிக்கப்படுகிறது. அங்கு ஓஸோன் கருவி மூலமாக தண்ணீருக்குள் ஓஸோன் வாயு செலுத்தப்பட்டு, தண்ணீரில் எஞ்சியுள்ள பாக்டீரியாக்களும் அழிக்கப்படுகின்றன. மீண்டும் மைக்ரான் ஃபில்டரில் வடிகட்டப்பட்டு, நூற்றுக்கு நூறு தூய்மையான குடிநீராக இருபது லிட்டர் கேன்களில் நிரப்பப்படுகிறது. தினசரி 450 கேன் குடிநீர் தயாராகிறது.

எங்களின் சுகம் பேக்கேஜ்டு குடி நீர் ஐ.எஸ்.ஐ. தரச் சான்றிதழ் பெற்றுள்ளது, எங்களுக்குப் பெருமை'' என்கிறார் ஒடந்துறை 'சுகம்' பேக்கேஜ்டு குடிநீர்த் திட்ட பரிசோதனைக் கூடத்தில் கெமிஸ்ட் ஆகப் பணிபுரிந்து வரும் கோமதி.

செய்தியும் சித்திரங்களும்:

**இந்திரா மணாளன்**

ஜிலு ஜிலு தொடர்கதை - 8

# கால் கிலோ காதல் அரை கிலோ கனவு

**பா**ண்டியாடிக் கொண்டிருந்த வளர்மதி திரும்பிப் பார்த்தபோது, அவள் கண்ணில் முதலில் பட்டது பத்மநாபன் இல்லை. ஹெட்மாஸ்டர்தான். எனவே அவள் ஜாக்கிரதை உணர்வு கொண்டாள். ஆட்டத்தை நிறுத்தாமலேயே, ''என்னடா?'' என்று அலட்சியமாகக் கேட்டாள்.

''உன்னாண்ட கொஞ்சம் பேசணும்'' என்று பத்மநாபன் சொன்னான்.

''இப்ப முடியாது. அஞ்சு நிமிஷத்துல கிளாஸுக்கு வந்துடுவேன். இங்கிலீஷ் சார் 'மிஸிண்ட்ரப்பரடேஷன் லீட்ஸ் டு மிஸரி'ல இன்னிக்கு டெஸ்ட்னு சொன்னாரே, படிச்சிட்டியா?''

பத்மநாபனுக்கு அவளுடைய பேச்சும் கவனிக்காத பாங்கும் குழப்பம் தந்தன. அதைவிடக் குழப்பம், சம்பந்தமில்லாமல் பாடம் குறித்து அவள் நினைவூட்டியது. எரிச்சலாக இருந்தது. அடக்கிக்கொண்டு திரும்பவும் அழைத்தான். 'உன்னாண்ட கொஞ்சம் பேசணும்.'

வளர்மதியும் தோழிகளும் ஆட்டத்தை முடித்துக்கொண்டு முகம் துடைத்தபடி வகுப்புக்குப் புறப்பட்டார்கள்.

''அப்ப நீ வரமாட்ட?''

''எங்கடா?''

''பேசணும்னு சொன்னனே?''

வளர்மதி அவனை உற்றுப் பார்த்தாள். வெறும் பத்தடி தொலைவிலேயே கையில் பிரம்புடன் காவல் காக்கும் ஐயனார் போல் மைதானம் முழுவதையும் தன் பார்வையால் அளவெடுத்துக் கொண்டிருக்கிறார் ஹெட் மாஸ்டர். இந்தக் குடுமிக்கு ஒரு சின்ன உள்ளுணர்வுகூடவா இருக்காது? மடையன், மடையன். திரும்பிப் பாருடா தடியா.

ஆனால், பத்மநாபன் கொக்குக்கு மதி எப்போதும் ஒன்று. வளர்மதி. அவள்மீது



சென்றாள்.

பதினொரு மணிக்கு பத்மநாபனின் அப்பா பள்ளிக்கு வந்தார். உடனே ப்யூன் எட்டியப்பன் வகுப்புக்கு வந்து ஹெட் மாஸ்டர் அவனை அழைப்பதாகச் சொன்னான்.

விபரீத எண்ணங்களும் கலவையான திட்டங்களும் புத்தியில் முட்டி மோத, அவன் தலைமை ஆசிரியரின் அறைக்குச் சென்றான்.

அப்பா நின்று கொண்டிருந்தார். அவனைப் பார்த்ததும் பல்லைக் கடித்தார்.

''பத்மநாபனா ஒம்பேரு? காலைல இரவுண்ட்ல பாத்தனே? பொண்ணுங்களோட ஒனக்கு என்னடா பேச்சு?'' என்று எடுத்த எடுப்பில் ஹெட்மாஸ்டர்

# பா.ராகவன்

வளர்த்துக்கொண்ட காதல். அப்பாவை அழைத்துவரச் சொல்லியிருக்கும் ஹெட் மாஸ்டர். விஷயம் என்னவாகப் போகிறது? இன்று விடை தெரியும். இது குறித்து அல்லது வேறு எது குறித்தாவது அவன் வளர்மதியுடன் பேசியாக வேண்டும். அதைவிட என்ன பெரிய விஷயம்? மிஸிண்ட்ரப்ரடேஷன் லீட்ஸ் டு மிஸரி நாசமாய்ப் போகட்டும்.

''உஸ்கூல் விட்டதும் கண்டிப்பா உன்னாண்ட பேசணும். ராஜமாணிக்க மொதலியார் கொடோணாண்ட வாய்க்கால் கரையோரம் வெயிட் பண்ணிட்டிருப் பேன். நீ வரலன்னா செத்துருவேன் வளரு'' என்று கண்ணைத் துடைத்தபடி சொல்லி விட்டு ஓடிப்போனான். வளர்மதி தலையில் அடித்துக்கொண்டு வகுப்புக்குச்

சட்டையைப் பிடித்தார்.

''இங்கிலீஷ் க்ளாஸ்ல இன்னிக்கு டெஸ்டு சார். ஒருவாட்டி ஒப்பிச்சிப் பாக்கலாம்னு போனேன்.''

''ஓஹோ. பாடம் ஒப்பிச்சிப் பாக்க ஒனக்கு க்ளாஸ்ல வேற பசங்களே கிடையாதா?''

''வளர்மதி இங்கிலீஷ்ல ஃபர்ஸ்ட் சார்.''

ஹெட் மாஸ்டர் முறைத்தார்.

''இந்தா பாருங்க சார், உங்க பையனைப் பத்தி விசாரிச்சேன். சுமாராத்தான் படிக்கறான். நிறைய டைவர்ஷன்ஸ் இருக்குது. எனக்கு இந்த லவ்வு கிவ்வுன்னா சுத்தமா புடிக்காது. படிக்கற பசங்க ஒழுங்கா

இல்லன்னா, நாளைக்கு எனக்குத்தான் கெட்ட பேரு. என்ன பண்ணலாம்னு நீங்களே சொல்லுங்க.''

அப்பா, பத்மநாபனைப் பார்த்தார். என்ன நினைத்தாரோ, பளாரென்று அவன் கன்னத்தில் ஓர் அறைவிட்டார். ''ஹெட் மாஸ்டர் கால்ல வுழுடா. இன்னோர் வாட்டி இந்த மாதிரி விஷயம் வந் திச்சின்னா, வீட்ல சேக்கமாட்டேன் உன்னிய'' என்று சொன்னார்.

அடடே விஷயம் இத்தனை எளிமை யானதா? பத்மநாபன் சந்தோஷமாக ஹெட் மாஸ்டர் காலில் விழுந்தான். ''மன்னிச் சிடுங்க சார். தெரியாம தப்பு பண்ணிட் டேன். இன்னமே என்னபத்தி நல்ல

''லாஸ்டா என்னா படம் பாத்த?''

''அலைகள் ஓய்வதில்லைக்கு அப்பறம் எதும் பாக்கல சார். அதுகூட அப்பாதான் இட்டுக்கினு போனாரு.''

ஹெட்மாஸ்டர் அவனது அப்பாவைத் திரும்பிப் பார்த்தார்.

''ஹிஹி. நல்ல படம்னு யாரோ சொன்னாங்க சார். போய்ப் பாத்தாத்தான் தெரியுது. ஒரே லவ்வு...'' என்றார்.

''தபார் பத்மநாபன், இதெல்லாம் நல்லது இல்லே. அந்தப் பொண்ணோட அப்பாவுக்கு விஷயம் தெரிஞ்சா, உன் தோலை உரிச்சிடுவாரு. ஊர்ல அவங் களுக்கு இருவது ஏக்கர் உப்பு ஏரி கெடக் குது. ரெண்டு மண்டி போட்டிருக்காங்க.

**'நேசி'** படத்துக்காக கவிஞர் பழநிபாரதி, இசையமைப்பாளர் சிற்பி கூட்டணியில் உருவாகி, பெரும் எதிர்பார்ப்பைக் கிளப்பியிருக்கும் பாடல்களின் பல்லவிகள் இதோ:

**கா**தல் மழை வந்து அடிக்குது
பூவில் மழைத் துளி தெரிக்குது
நெஞ்சம் அதில் உனை ரசிக்குது வா...வா...
கண்கள் கனவினில் மிதக்குது
நெஞ்சம் விழியினில் துடிக்குது
இன்னும் உயிர் கொஞ்சம் இருக்குது வா... வா...

தாவணியை மழை வந்து
நனைப்பது சுகம்...
வானவில்லை இருவரும்
ரசிப்பது சுகம்...
ஒடிவா... தேடிவா...
நனைந்து விளையாட வா...

**எ**ன்னுடைய மனசு உன்னிடமே
உன்னுடைய மனசு என்னிடமே
மூடாத கண்கள்கொண்டு
உன்னழகைப் பார்த்தேன்.
மூச்சுக்குள் உன்னைச் சுவாசித்தும்
நான் பார்த்தேன்.

விஷயம் மட்டும்தான் உங்க காதுல விழும். இந்த பத்மநாபன் திருந்திட்டான் சார். நேத்தே எங்கப்பாகிட்ட மன்னிப்பு கேட்டுட்டேன் சார்.''

''நிஜமாவா?'' என்றார் ஹெட் மாஸ்டர்.

''ஆமா சார். நைட்டு வீட்ல சொன் னான். இந்த மாதிரி ஒரு பொண்ணு... அப்படின்னு. இந்தக் காலத்துப் பசங்க புத்தி ஏன் இப்பிடிப் போவுதுன்னு தெரி யல...'' என்று அப்பா பொதுவில் சில வரிகள் கவலைப்பட்டார்.

''மொதல்ல சினிமா பாக்கறத நிறுத் தணும்.''

''இன்னமே தியேட்டர் பக்கமே போக மாட்டேன் சார்'' என்றான் பத்மநாபன்.

ஆள்பலம், அடியாள் பலம்னு ஒரு மாதிரி யானவங்க. படிக்கற வயசுல ஒனக்கு ஏண்டா இதெல்லாம்?''

''தப்புதான் சார். தெரியாம செஞ்சிட் டேன். இப்பலேருந்து அந்தப் பொண்ணு என் தங்கச்சி சார். நேத்து எங்கப்பா வாண்டகூட இதான்சார் சொன்னேன்.''

ஹெட் மாஸ்டர் அவனை உற்றுப் பார்த்தார். ''நம்பலாமா?''

''எங்கப்பான்னா எனக்கு உசிரு சார். அவர் மேல சத்தியமா சொல்றேன். என்னிய நம்புங்க சார்...''

இப்போது பத்மநாபனின் அப்பாவுக் குக் கண்ணில் நீர் கோத்துக்கொண்டது. அடடே, இத்தனை நல்லவனா? தெரியா

மல் போய்விட்டது. பாதகமில்லை. இனி தெரிந்துகொள்ளலாம்.

ஹெட் மாஸ்டரும் அப்பாவும் ஒரு சேர உணர்ச்சிவசப்பட, பத்மநாபனுக்கு மிகவும் குஷியாகிவிட்டது. ராஜலட்சுமி திரையரங்கில் அவன் காண நேர்ந்த எந்தத் திரைப்படத்திலும் இத்தனை நேர்த்தியான வசனங்கள் வந்ததில்லை. தன் நாவில் சரஸ்வதி நர்த்தனமாடுகிறாள். சந்தேகமில்லை. இனி கையும் களவுமாகப் பிடிபட்டால்கூட ஹெட் மாஸ்டர் அத்தனை சுலபத்தில் தன் விஷயத்தில் நடவடிக்கை ஏதும் எடுத்துவிடமாட்டார்.

''சரி ஒழுங்கா கிளாசுக்குப் போ. ஒன்ன வேணா வேற செக்‌ஷன் மாத்தட்டுமா?''



''ஐயோ வேணாம் சார். நைன்த் 'பி'க்குதான் சார் மகாலிங்க வாத்தியார் கணக்கு எடுக்கறாரு. அவரு க்ளாஸ்னா எனக்கு உசிரு சார்.''

அவனை ஏற இறங்கப் பார்த்தவர், ''கணக்குல நீ எவ்ளோ?'' என்று கேட்டார்.

பத்மநாபன் யோசித்தான். ஆபத்துக்குப் பாவமில்லை. ஒரு சி.பி.ஐ. ஆபீசர் மாதிரி ஹெட்மாஸ்டர் தன் பிராக்ரஸ் கார்டுகளைத் தேடி எடுத்துப் பார்ப்பார் என்று தோன்றவில்லை. எனவே ''எண்பத்தி ஆறு சார்'' என்று சொன்னான்.

''ஓ.கே. அடுத்ததுல நூறு வாங்கணும். புரிஞ்சுதா?''

''எஸ் சார்'' என்று விட்டான் சவாரி. சந்தோஷமாக இருந்தது. இரண்டு தலைகள் வசமாக அகப்பட்டன. மிளகாய்ப்பழம் அரைப்பதற்கு. பெரியவர்களை ஏமாற்றுவதில் ஒரு லயம் கலந்த சந்தோஷம் இருக்கத்தான் செய்கிறது. சந்தர்ப்பங்கள் தொடர்ந்து இப்படிக் கைகொடுத்தால் நல்லது.

மாலை வகுப்புகள் முடிந்ததும் கலியமூர்த்தியின் சைக்கிளை வாங்கிக்கொண்டு நேரே ராஜமாணிக்க முதலியார் உப்பு கொடோனுக்கு எதிரே உள்ள ஏரிக்கரைக்குச் சென்றான். கரையோரம் நிறைய கட்டுமரங்கள் இருந்தன. காத்திருந்தான். வளர்மதி வரவேண்டும். வந்ததும், 'என்னடா விஷயம்? சீக்கிரம் சொல்லு. நான் அவசரமா போகணும்' என்பாள். சந்தேகமில்லை. அவசரமாகக் கிளம்பிச் சென்று அவள் ராக்கெட் விட்டாக வேண்டும். விடுகிற ராக்கெட் 'ஸ்கைலாபா'க இல்லாமல் இருக்க வேண்டும். அவளை ஏற்றிக்கொண்டு கட்டுமரத்தில் புறப்பட வேண்டும். கிழக்கே கடல் கண்ணுக்கெட்டும் தொலைவில் இருக்கிறது. ஏரித் தண்ணீர் அங்கு சென்று சேர்கிறது. வழியெங்கும் ஏரியில் பாத்திகட்டி, ஆங்காங்கே உப்புப்பூ பூத்திருக்கிறது. இம்மாதிரி ஒரு லொக்கேஷன் அமைவது கஷ்டம். காதலை வெளிப்படுத்த உப்பளங்களைக் காட்டிலும் உன்னதமான இடம் வாய்ப்பதற்கில்லை.

காத்திருந்தான். கண்ணை மூடிக் கனவு கண்டான். கட்டுமரம் மிதக்கிறது. கண்ணுக்கெட்டிய தொலைவு வரை அவனைத் தெரிந்த யாருமில்லை. அவனும் வளர்மதியும் மட்டும்.

'சொல்லு. என்ன விஷயம்?'

'ஐ லவ் யூ வளர்மதி.'

வளர்மதி புன்னகை செய்தாள். 'நானும் தாண்டா குடுமி' என்று சொன்னாள்.

நினைவு மிகவும் இதமாக இருந்தது. கண்ணைத் திறந்தபோது, வளர்மதியுடன் அவள் வீட்டு ஸ்லேவ் வீரபத்திரனும் நின்றிருந்தான்.

(தொடரும்)



# அக்கம் பக்கம்

**ப**த்து நிமிடம் - ஏழு குண்டுகள்... அறுபத்திச் சொச்சம் உயிர்கள்!

மீண்டும் ஒருமுறை நடந்திருக்கிறது அந்தக் கொடூரம். நிலைகுலைந்து போய் விட்டது ஜெய்ப்பூர்.

அம்மோனியம் நைட்ரேட், இரும்பு பால் பியரிங் குண்டுகள் மற்றும் ஆர்டிஎக்ஸ் என்ற மூன்று வன்மம் நிறைந்த வஸ்துக்களின் கலவை தாக்குதலுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளதால், சேதம் மிக அதிகம். அறுபத்தி மூன்று உயிர்கள். போதாக்குறைக்கு நூற்றைம்பது பேர் மருத்துவமனைகளில் உருக்குலைந்து போய் கிடக்கிறார்கள். ஜெய்ப்பூர் மக்களின் மனநிலையோ அதைவிட மோசமாக...

'அத்தனை புண்ணியமும் எங்களுக்கே' என்று ஏகபோக உரிமை கொண்டாடியிருக்கிறார்கள் இந்தியன் முஜாகுதீன்கள். வெறுமனே வாய்வார்த்தையோடு நிறுத்திக்கொள்ளாமல், அதற்கான ஆதாரங்களை



வீடியோ படமெடுத்து, ஈமெயில் மூலமாக ஊடக நிறுவனங்களுக்கு அனுப்பிவைத்திருக்கிறார்கள்.

ஆஞ்சநேயர் ஆலயப்பகுதியைத் தேர்வு செய்ததில் இருந்தே அவர்களுடைய நோக்கம் வெளிப்படையாகிறது. இந்துக்களைக் கலவரப்படுத்த வேண்டும். இந்து - முஸ்லிம் இடையே குழப்பத்தை உண்டாக்கி, அந்த நெருப்பில் பீடி பற்ற வைத்துக்கொள்ள வேண்டும். அதனை இந்தியன் முஜாகுதீன்கள் வேறு வார்த்தைகளில் சொல்லியிருக்கிறார்கள்.

''சுற்றுலாத்தலம் என்ற பெயரில் இந்திய அரசுக்கு வருவாயை வாரிவழங்கும் ஜெய்ப்பூரைத் தாக்கினால், ஜெய்ப்பூரின் அமைதி அகலும். வருவாய் குறையும். எங்களுக்கும் சர்வதேச கவனம் கிடைக்கும். ஆகவே, ஜெய்ப்பூரைத் தேர்வு செய்தோம்.''

'ராஜஸ்தானில் நடப்பது பா.ஜ.க. ஆட்சி. அது அமைதியாக நடக்க அனுமதித்தால்



நாங்கள் முட்டாள்களாகிவிட மாட்டோமா?' என்கிற செய்தியை வரிகளுக்கிடையே வாசித்து எல்.கே.ஜி. பிள்ளைகூட புரிந்து கொள்ளும். ஜெய்ப்பூர் காவல்துறை, அதற்கென்று பிரத்யேகமான கோணத்தில் விசாரணைப் படலத்தைத் தொடங்கியுள்ளது. அவர்களுடைய சந்தேக முன்முனை வங்கதேசத்தைச் சார்ந்த தீவிர வாத அமைப்பான ஹர்கத் உல் ஜிஹாதி இசுலாமி என்ற இயக்கத்தை நோக்கியே நகர்ந்துகொண்டிருக்கிறது.

காரணம், சைக்கிள் கேரியரில் குண்டு வைத்து வெடிக்கச் செய்வது ஹூஜி

**ஆர்.முத்துக்குமார்**

# காயபூமி -ஜெய்ப்பூர்

அமைப்பின் உத்தி. ஒன்று, ஹூஜி அமைப்பு இந்தக் காரியத்தைச் செய்திருக்க வேண்டும் அல்லது அதன் உதவியுடன் இந்தியன் முஜாகுதீன்கள் செய்திருக்க வேண்டும்.

வழக்கம்போல, உயிரிழந்தவர்கள் குடும்பத்துக்கு தலா ஒரு லட்சம் ரூபாயும் காயமடைந்தவர்களுக்கு ஐம்பதாயிரமும் அறிவித்திருக்கிறார் பிரதமர் மன்மோகன் சிங்.

இவையெல்லாமே சம்பிரதாயங்கள் போல நடப்பவை. ஆக வேண்டியவற்றைச் செய்துவிட்டு அடையாளம் தெரியாமல் போய்விடுகிறது. நாமும் உச் கொட்டிவிட்டு அடுத்த கட்ட வேலைகளைப் பார்க்கச் சென்றுவிடுகிறோம். அரசாங்கமும் உதவிகள், விசாரணை கமிஷன்கள் என்று தன்னுடைய கடமையை முடித்துக் கொள்கிறது. இதுதான், இது மட்டும்தான் தேவையா? தற்காலிக ஆறுதல்களோடு திருப்தி அடைந்துவிட்டால் பாதுகாப்பான எதிர்காலம் என்ன ஆவது?

அமைதியைச் சீர்குலைக்கிறார்கள் என்றால், எதற்காக என்று யோசிக்க வேண்டும். அதைத் தடுப்பது எப்படி என்பதைக் காட்டிலும், தவிர்ப்பது எப்படி என்பதில் கவனம் செலுத்தியாக வேண்டும். தீர்வுகளைக் கண்டுபிடித்துப் பிரச்னைகளைச் சரி செய்ய வேண்டும். இல்லாவிட்டால், ஜெய்ப்பூர்களை, ஹைதராபாத்களை, மாலேஹாம்களை, சம்ஜௌதாக்களை மட்டும்தான் சந்தித்துக் கொள்ள வேண்டியிருக்கும், மீண்டும், மீண்டும்! ஆனால், மத்திய அரசும் ராஜஸ்தான் அரசும் மோதிக் கொண்டிருக்கின்றனவே யொழிய இணைந்து செயல்பட முயற்சிகள் ஏதும் எடுக்கக் காணோம்!

'பிறந்த குழந்தைக்கு, பசியெடுத்த வுடன் அழுகின்ற அழுகையே அதன் முதல் மொழி. அந்த அழுகையை அக் குழந்தை எப்போது நிறுத்துகிறது என்று உங்களால் சொல்ல முடியுமா?' என்று குழந்தைகளுடன் குழுமியுள்ளவர்களைப் பார்த்து வினவுகிறார் திருச்சி, ஹோலி கிராஸ் சர்வீஸ் சொஸைட்டியின் செயலா ளர். குழந்தைக்கான பேச்சாற்றல் வகுப்பில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான பதிலைக் கூறுகின்றனர். அத்தனை பேருமே காது கேளாத குழந்தைகளின் தாய்மார்கள்.

''காது கேளாதோர்க்கான அடிப்படைச் சிக்கலே காதில் விழுகிற சப்தம் மூளைக் குச் செல்வதில்லை; பார்வை வழியா கவும் மூளைக்குச் செல்வ தில்லை. இளம் வயதி லேயே இது



✱ காந்திமதி தம் மகள் வைஷ்ணவியுடன்

போன்ற குறைபாடுகளைக் கண்டறிந்து உதவிடவே இதுபோன்ற வகுப்புகள் நடத்தப்படுகின்றன. முற்றிலும் இலவச மாக தமிழக அரசு நடத்திவரும் பயிற்சி மைய தொடர் வகுப்பு இது. இவர்களில் பெரும்பாலோர் ஐந்து வயதுக்குப் பின்னர் செவித்திறன் மற்றும் பேச்சுத் திறன் பெற்று சாதாரண பள்ளிகளில் சேர்ந்து பயிலும் வாய்ப்பினைப் பெறுவார்கள் என்பது உறுதி!'' எனத் திடமாகக் கூறுகிறார் திருச்சி மாவட்ட ஊனமுற்றோர் மறுவாழ்வுத் துறை அலுவலர்.

திருச்சி, செம்பட்டு பகுதியில் வசிப் பவர் மாரியம்மாள். ''எனக்கும் பார்வை தெரியாது. என் கணவருக்கும் பார்வை தெரியாது. எங்களுக்குப் பிறந்த பெண் குழந்தைக்குப் பார்வை தெரியும். ஆனால், காது கேட்கவில்லை. பேச்சு வரவில்லை. இப்ப நல்ல முன்னேற்றம் தெரியுது. வண் ணங்களைக் கண்டுபிடித்துச் சொல்றா. மெதுவா அம்மா... அப்பா...ன்னு சொல்றா எங்க செண்பகப்பிரியா!'' என்று மகிழ்ச்சி யில் பூரிக்கிறார்.

''என் பெண் குழந்தைக்கு இரண்டரை வயது. அழுகையைத் தவிர, வேறெந்த சப்தமும் எழுப்பமாட்டாள். இங்கு வந்த



✱ சாந்தி தம் மகன் அருள்ராஜுடன்

மூன்று மாதங்களில் குழந்தை யிடமிருந்து கொஞ்சம் கொஞ்ச மாக வார்த்தைகள் வரத் துவங்கி யிருக்கு. வீட்டில் கதவு மறைவில் ஒளிஞ் சிக்கிட்டு அ...ம்...மா... என்று கூப்பிடு றொள். சந்தோஷமாயிருக்கு. ஐந்து வயதில் என் குழந்தையை சாதாரணப் பள்ளியில் சேர்த்துவிட முடியும் என்கிற நம்பிக்கை துளிர்த்திருக்கு!'' எனச் சொல்கிறார் வையம் பட்டியிலிருந்து தினசரி வந்து செல்லும் காந்திமதி.

திருச்சி, தென்னூர் பகுதியிலிருந்து வருபவர் சாந்தி. அவருடைய மூன்று வயதுக் குழந்தை அருள்ராஜோடு வந்திருக் கிறார்.

''அரசே நடத்தி வரும் இந்தப் பயிற்சி மைய வகுப்புகள், எங்களைப் போன்ற பெற்றோர்களுக்கு ஒரு வரப்பிரசாதம்!'' என்கிறார்.

கடந்த மூன்று மாதங்களாக, காது கேளாத மிக இளம் வயதுக் குழந்தை

# நிசப்த பூக்கள்!

களுக்கான பேச்சு மற்றும் மொழிப்பயிற்சி மைய தொடர் வகுப்புகள் நடைபெற்று வருகின்றன. சென்னை, திருவள்ளூர், கோவை, சேலம், திருவாரூர், திருச்சி, சிவகங்கை, மதுரை, திருநெல்வேலி, கன்னியாகுமரி ஆகிய பத்து மாவட்டங்களில் அதன் மையங்கள் இயங்கி வருகின்றன. திருச்சி மாவட்ட, ஹோலி கிராஸ் சர்வீஸ் சொஸைட்டி போல, அந்தந்த மாவட்டங்களில் ஏதேனும் ஒரு தொண்டு நிறுவனம், பயிற்சி மையத்தின் ஒருங்கிணைப்பாளராக இருந்து வருகிறது.

காலை பத்து மணி முதல் மதியம் மூன்று வரை நடக்கும் வகுப்புகள், இதற்கென தேர்ச்சி பெற்ற ஆசிரியைகளால் நடத்தப்படுகின்றன. குழந்தைகளுடன் தினசரி வந்து செல்லும் பெற்றோர்களுக்கு, பயணப்படி நாளொன்றுக்கு பத்து ரூபாய் வழங்கப்படுகிறது. குழந்தைகளின் இரு செவிகளின் உட்புறங்களை அச்செடுத்து அவற்றுக்கேற்ற ஹியரிங் எய்ட் கருவிகள் தரப்படுகின்றன. கூடவே சூரிய ஒளியினால் இயங்கிடும் பேட்டரி.



* ஹியரிங் எய்ட் மிஷின் பொருத்திட காது அச்சு

''பொதுவாக, காது கேளாத குழந்தைகளை நான்கைந்து வயதுக்குப் பின்னரே கவனிக்கின்றனர். பல இடங்களுக்கும் அலைந்து திரிந்து முயற்சி எடுக்கின்றனர், பெற்றோர்கள். அவர்களின் மிக இளம் வயதில் செவித் திறன் மற்றும் பேச்சுத் திறன் பயிற்சி தந்து வந்தோமானால், படிப்படியாக அக்குழந்தைகள் மொழி மற்றும் பேச்சுத் திறன் பெற்றுவிடுவர். மேலும் இதுபோன்றதொரு திட்டமானது இந்தியாவிலேயே தமிழகத்தில் மட்டும்தான் செயல்படுத்தப்பட்டு வருகிறது!'' என்றார் தமிழக சமூக நலத்துறை அமைச்சர் (முன்னாள்) டாக்டர் பூங்கோதை.

செய்திச் சித்திரம்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

பார்க்க அழகாக இருக்கிறார்கள் அந்தப் பத்து ஜோடிகளும். கோவை, மதுரை, சென்னையைச் சேர்ந்தவர்கள். ஜெயா டீ.வி.யில் வரும் 'என்ன பொருத்தம்' நிகழ்ச்சியில் பங்கேற்பதற்காக, 160 ஜோடிகளிலிருந்து இறுதியாகத் தேர்வு செய்யப்பட்டவர்கள்.

''இன்னைக்குப் பல சேனல்களில் தம்பதியரை வச்சு பல நிகழ்ச்சிகள் வந்தாலும், எதுவுமே ரியாலிட்டியா இல்ல. அந்தக் குறையைப் போக்கணும்னு தொடங்கப்பட்டதுதான் 'என்ன பொருத்தம்!' முதல் கட்டமா தமிழகம் முழுவதுமிருந்து ஜோடிகளை வரவழைச்சு, அவங்களுக்கு ஒரு ரியல் ஜோடி மூலமா பல கட்டத் தேர்வுகள் நடத்தினோம். சேத்தன் - தேவதர்ஷினி தம்பதியின் ஸ்ட்ரிக்டான எக்ஸாமினேஷன்ல பாஸ் பண்ணின பத்து ஜோடிகள்தான் நீங்க பார்க்கறது'' என்றுவிட்டு ப்ரோகிராமின் கிரியேட்டிவ் ஹெட் பிரபு நேபால் ஓரமாய் ஒதுங்கிக்கொள்ள, நாம் தம்பதியரிடம் பேசினோம்.

''எங்களுக்குச் சமீபத்துலதான் கல்யாணமாச்சு. இந்த நிகழ்ச்சியில செலக்ட் ஆயிட்டோமே தவிர, எங்க வீட்ல சென்னைக்கு அனுப்ப ஒரே பயம். 'அங்க மனுஷங்க வேற மாதிரி. எப்ப எந்த நேரத்துல ஆளக் கவுப்பாங்கன்னு தெரியாது. அதனால நீங்க போகவேண்டாம்'னு சொல்லிட்டாங்க. அப்புறம் எல்லாரையும் சமாளிச்சு வர்றதுக்குள்ள போதும் போதும்னு ஆயிடுச்சு. ஆனா, இங்க வந்தப்புறம்தான் தெரிஞ்சது சென்னை மக்கள் எவ்ளோ நல்லவங்கன்னு'' என்றனர் மதுரை கார்த்திக் பிரபு - ரேகா தம்பதி.

கோவை நிரஞ்சன் குமார், ''என் மனைவியை இது நாள் வரை என்னவளை நான் அதிகமா புரிஞ்சுக்காம இருந்தேன். இந்த நிகழ்ச்சியில கலந்துக்கிட்டு கேட்கப்பட்ட கேள்விகள், என்னை அடுத்த கட்டத்துக்குக் கொண்டு போனப்பதான் தெரிஞ்சது, என்னவளை இன்னும் நான் புரிஞ்சுக்கணும்னு. இப்போ எல்லாம் சரியாயிடுச்சு. அவளேகூட என்னை இந்தளவு புரிஞ்சுருப்பாளான்னு சந்தேகம்தான்'' என்று கண் சிமிட்ட, மனைவி ஆர்த்திக்கு ஏக வெட்கம்.

* பிரபு நேபால்



''இவரு நேரத்துக்கு வீட்டுக்கு வந்ததே இல்லீங்க. ஒரு நாள்கூட மனசு விட்டுப் பேச முடியாது. யந்திரத்தனமாத்தான் வாழ்க்கை ஓடும். எழுந்திருக்கறது, சாப்பிடறது, வேலைக்கு ஓடறது, தூங்கறதுன்னு சலிப்பாகி, பல நேரங்கள்ல மனம் புழுங்கியிருக்கேன். ஆனா, 'என்ன பொருத்த'த்துக்காக நாலு நாள் சென்னை முகாம்ல இவரு என்கூடவே இருந்தது, எனக்கு செம ட்ரீட்! மனசுவிட்டு என்னைப் பகிர்ந்துக்கிட்டேன். இவரும் (அரவிந்த்குமார்) என்னைப் புரிஞ்சுக்கிட்டு இனிமே சீக்கிரம் வீடு வர்றதா சொல்லியிருக்காரு'' என்று உணர்ச்சி வசப்பட்டார் மதுரை ராஜ கோமதி.

திருமதி சிபி, தம் கணவர் கணேஷுக்கு நடிகராக ஆசையென்றும் அதன் காரணமாகவே நிகழ்ச்சியில் கலந்துகொண்டதாகவும் கூறினாலும், தங்களுக்குள் ஒத்துப் போகும், ஒத்துப்போகாத விஷயங்களை ப்ரோகிராம் மூலம் உணர்ந்துகொண்டதாய்ச் சொன்னார்.

# சேனல்




* தேவதர்ஷினி - சேத்தன்



* கார்த்திக் பிரபு - ரேகா

''இந்தப் பத்துப் பேர்ல சிறந்த ஜோடியை செலக்ட் பண்ணப் போறோம்'' என்ற பிரபு நேபால், முத்தாய்ப்பாக ஒரு விஷயத்தையும் குறிப்பிட்டார் :

''இந்த நிகழ்ச்சிக்காக, காதல் மணம் புரிந்த ஒரு தம்பதியைச் சந்திச்சப்போ, மாமியார் வீட்ல தங்களை இன்னும் ஏத்துக்கலைன்னு ரொம்ப ஃபீல் பண்ணிப் பேசினாங்க, அந்தப் பொண்ணு. கையில கைக் குழந்தையோடு அவங்க கண்ணீர்விட, மனசு பாரமாயிடுச்சு. உடனே குழந்தையைப் படம் பிடிச்சுக்கிட்டு மாமியார் வீட்டுக்குப் போனோம். 'உங்க மருமகளை ஏத்துப்பீங்களா?'ன்னு கேட்டதுக்கு, 'முடியாது'ன்னு கட் அண்ட் ரைட்டா மறுத்துட்டாங்க. வீடியோவைப் போட்டுக்காட்டி, 'உங்க பேரக்குழந்தை மேலகூட ஆசையில்லையா?'ன்னு கேட்டதும், அந்தம்மா அந்தச் சின்னக் குட்டியப் பார்த்து உருகிட்டாங்க. அப்புறம் என்ன? குடும்பம் ஒண்ணு சேர்ந்துடுச்சு... 'என்ன பொருத்தம்' இதை சாதிச்சதுல, அளவில்லாத மகிழ்ச்சி எனக்கு!''

– மதுமிதா



* கணேஷ் - சிபி



* அரவிந்த்குமார் - ராஜேஸ்வரி

# ஸ்வீட் ஜோடீஸ்!

# நடக்குமென்பார்; நடக்கும்!

**தஞ்சை பரத்வாஜ்**

**25.05.2008 முதல் 31.05.2008 வரை**

**மேஷம்:** கவனமாகச் செயல்படும் திறன் கொண்ட மேஷராசிக்காரர்களே... அதிக மதிப்பெண்கள் பெறுவீங்க. வருவாய் பெருகுமுங்க. புதிய வேலைவாய்ப்புங்க தேடி வரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். புதிய தொழில் தொடங்கப் போறீங்க. நாணயமாக நடந்துக்குவீங்க. ராகு / கேது / சனி வழிபாடு நன்மையளிக்குமுங்க.

*(புதிய வேலை வரப்போவுது பொழைச்சுக்குங்க)*

**ரிஷபம்:** புண்ணியப் பயணம் மேற்கொள்வதில் மிகுந்த ஆர்வம்கொண்ட ரிஷப ராசிக்காரர்களே... வாழ்க்கை இனிமையாக இருக்கும். வசதிவாய்ப்புகள் பெருகப்போவுது. வேலையில் சுமை இருக்காது. வியாபாரம் சூடுபிடிக்கும். குரு / சனி வழிபாடு நன்மையை அதிகப்படுத்தும்.

*(வெயில் அதிகமாக இருக்குன்னு ஒரே 'ரூம்ல' நாலைந்து ஏ.சி. வைச்சுக்காதீங் கப்பா)*

**மிதுனம்:** தெய்வ நம்பிக்கையோடு காரியங்களில் ஈடுபடும் மிதுன ராசிக்காரர்களே... சுபகாரியங்கள் தடையில்லாம நடைபெறப் போகுது. வாக்கு மேன்மையை அடையும். வேலையும் கொஞ்சம் அதிகரிக்குமுங்க. கைப்பொருள் மீது கவனமா இருங்க. ராகு / கேது வழிபாடு நன்மையளிக்குமுங்க.

*(எவ்வளவு தொல்லை வந்தாலும் தெய்வ நம்பிக்கையை மட்டும் இழந்துடாதீங்க)*

**கடகம்:** தெளிவான எண்ணம் கொண்ட கடகராசிக்காரர்களே... வேலையில சுமை அதிகமாகும். குடும்ப வாழ்க்கையில விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. மறைமுக எதிர்ப்புகளும் இருக்கும். உடல் ஆரோக்கியம் நல்ல நிலையில் இருக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மைதரும்.

*(விட்டுக் கொடுத்து வாழப் பழகிக் குங்க ப்ளீஸ்)*

**சிம்மம்:** திறமையான சிம்மராசிக் காரர்களே... இந்த வாரம் சிறப்பாக அமையுமுங்க. வியாபாரம் ஜோரா இருக்கும். குடும்பத்துல மகிழ்ச்சி பொங்குமுங்க. ஆடை ஆபரணங்கள் வாங்கிக் குவிப்பீங்க. வெளிநாடு போற வாய்ப்பு வரும்ங்க. ஆஞ்சநேயர் வழிபாடு நன்மையைத் தருமுங்க.

*(ஆடை ஆபரணங்களை சேர்த்துக்குங்க)*

**கன்னி:** பணிவு மிக்க கன்னி ராசிக் காரர்களே... குடும்பச் சொத்துல இருந்து வந்த பிரச்னைங்க முடிவுக்கு வரப்போகுது. சுபச்செலவுகள் உண்டுங்க. கடன் தொல்லைங்க முடிவுக்கு வருமுங்க. வியாபாரம் நல்லபடியா போகும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மையைத் தருமுங்க.

*(சுபச்செலவுதான் கலங்காமச் செய்யுங்க.)*

**துலாம்:** நேர்மைமிக்க துலாம் ராசிக் காரர்களே... உத்தியோக இடமாற்றம் உண்டுங்க. குடும்பத்துல பிரச்னைகள் இருக்காது. கல்வியில் நல்ல முன்னேற்றம் காணலாம். வேலைப்பளு அதிகமாகும். திருமண பாக்கியம் உண்டாகப் போகுது. நண்பர்கள் தேடி வந்து உதவுவாங்க.

*(உங்க பையன் டென்த்ல முதல் மார்க் எடுத்தா நமக்கு மறக்காம 'ஸ்வீட்' கொடுங்க)*

**விருச்சிகம்:** தைரியம்மிக்க விருச்சிக ராசிக்காரர்களே... தடைப்பட்ட காரியங்கள் மளமளன்னு நடக்கப் போவுது. குடும்பத்துல மகிழ்ச்சி பொங்குமுங்க. உல்லாசப் பயணம் போவீங்க. கடன் தொல்லைங்க

## ரஜினிக்கு ஹீரோயினா நடிக்க ராஜயோகம் இருக்கா பாருங்க சார்!



இருக்காது. பணம் பல வகையில வருமுங்க. ஆஞ்சநேயர் வழிபாடு நன்மையை அதிகப்படுத்துமுங்க.

(சம்மர்ல ஜாலிதான் போங்க...)

**தனுசு:** பழகுவதற்கு இனிமையான தனுசு ராசிக்காரர்களே...உத்தியோகத்துல நல்ல பெயர் வாங்குவீங்க. கடன் பாக்கிகள் வசூலாகும். நண்பர்கள் உதவி செய்வாங்க. சாப்பாட்டு விஷயத்துல கவனமா இருங்க. ராகு / கேது / குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

(வெயில் காலமாக இருக்கு. உடம்பைக் கவனிச்சுக்குங்க...)

**மகரம்:** தளராத மனம் கொண்ட மகரராசிக்காரர்களே... மனத்தில் இருந்த குழப்பங்கள் தீருமுங்க. ஆரோக்கியம் நல்லபடியாக இருக்கும். பிரிந்த குடும்பம் ஒண்ணு சேரும். தொழில்ல நல்ல ஏற்றம் இருக்குமுங்க. ராகு / கேது / குரு வழிபாடு நன்மையைத் தருமுங்க.

(ஈகோ இல்லாம குடும்பத்துல சந்தோஷமா இருங்களேன்...)

**கும்பம்:** பழகுவதற்கு இனிய கும்பராசிக்காரர்களே... இது ரொம்ப அருமையான வாரமுங்க. நீங்க தொட்டால் மண்கூடப் பொன்னாகுமுங்க. வியாபாரத்துல நல்ல முன்னேற்றம் இருக்குமுங்க! கல்வியில மேன்மை அடைவீங்க. சனீஸ்வர வழிபாடு நன்மையளிக்குமுங்க.

(நேரம் இருக்கும்போதே காரியம் சாதிச்சுக்குவீங்க)

**மீனம்:** போராட்ட குணம்மிக்க மீன ராசிக்காரர்களே... வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேருமுங்க. பூர்வீக சொத்துல இருந்த பிரச்னை தீர்ந்து போகும். தொழில் செய்ய உதவிங்க கிடைக்குமுங்க. அடிக்கடி மன உளைச்சல் ஏற்பட்டாலும் நன்மைக்குக் குறைவு இருக்காதுங்க. ராகு / கேது / குரு வழிபாடு நல்ல பலன்களை அளிக்குமுங்க.

(உதவி கிடைக்கப்போகுது. தொழில் உடனே தொடங்குங்க)

'அம்மா பாடுற தாலாட்டு!
அதுதான் நமக்கு முதல் பாட்டு!
ஆடி ஓடுற விளையாட்டு!
அதுக்குப் பின்னே பல பாட்டு!
கம்மாக்கரை வயல்பாட்டு!
காதில் பாயும் தேனூற்று!
காற்றிலாடும் இளநாத்து!
காதல் பேசும் அதக் கேட்டு!
களையெடுத்தா! நாத்துநட்டா!
கட்டுறோம் பாட்டு - பின்னே
களத்துமேடு கதிரடிச்சா!
**களை கட்டும் பாட்டு!'**

இராம மக்கள் இம்மாதிரியான பாடல்கள் படைக்கிறார்கள். தம்முடைய ஆசைகளை, காதலை, சோகத்தை, உறவைப் பாடல்களில் வெளிப்படுத்துகிறார்கள். நமது மொழி தெரியாதவர்கள்கூடப் புரிந்துகொண்டு ரசிக்கிறார்கள்.

ஐரோப்பிய நாடுகளிலிருந்து, எங்கள் கச்சேரிக்காக நிறைய அழைப்புகள் வருகின்றன. இத்தாலியில் ஒரு கச்சேரியின் போது, மாட்டு வண்டிப் பாடலுக்கும் கும்மிப்பாடலுக்கும் எல்லோரும் எழுந்து ஆடினார்கள்! நம்முடைய நகரங்களில்கூட இதைப் பார்க்க முடியாது. நம் மக்கள் கச்சேரியை விரும்பி உணர்ந்து கேட்கிறார்கள். ஆனால், ஆட்டம் பாட்டம் என்றால் மிகவும் கூச்சப்படுகிறார்கள்.

கெட் டு கெதர் போன்ற நிகழ்ச்சிகளுக்கும் மக்களிசைப் பாடல்களுக்கான அழைப்பு வருவது, எங்களுக்கு நிறைவான மகிழ்ச்சி தருகின்றது. திருமணக் கச்சேரிகளுக்குச் சென்றால், மணமகன்-மணப்பெண் மற்றும் அவர்கள் பெற்றோர்களின் பெயர்களை எல்லாம் சேர்த்து இட்டுக் கட்டிப் பாடுகிறோம். அது அவர்களுக்கு ஓர் ஆவணமாக அமைந்துவிடுகிறது.

ஒரு நிகழ்ச்சிக்கு எங்களை அழைத்தார்கள் என்றால், தொடர்ந்து வரும் அவர்களின் குடும்ப நிகழ்வுகளுக்கு எங்களுடைய கச்சேரியைக் கேட்கிறார்கள். நாங்கள் ராசியான ஜோடி என்று பெயர் பெற்றுவிட்டோம்.



# இத்தாலியில் கும்மிப்பாடல்!

வரதட்சணைக் கொடுமை, பெண் சிசுக் கொலை போன்ற சமூகப் பிரச்னைகளுக்கும் பெண் உரிமைக்குக் குரல் கொடுக்கவும்கூட பாடல்கள் உள்ளன. ஒரு முறை என் கணவர் ஒரு பெண்ணிடம் பாடல் சேகரிக்கச் சென்றிருந்தபொழுது,

அந்தப் பெண் தன் அக்கா வரதட்சணைக் கொடுமையால் இள வயதிலேயே இறந்து விட்ட சோகம் தாளாமல், அழுது ஒப்பாரி பாடத் துவங்கிவிட்டாள்.

**'வண்ணக் கொடிக் காலாம்**
**வரிக் கொடிக்கே வெத்திலையாம்!**
**- சின்ன**
**வயசுலேயே மாலையிட்டு**
**வருத்தங்களைச் சொல்ல வந்தேன்!'**

பெண்ணின் இந்தத் துயரம் தீர வேண்டுமானால், தாய் தன் பிள்ளைக்கு அதன் சிறு வயதிலிருந்தே வாழ்க்கையைச் சொல்லிக்கொடுத்து வளர்க்க வேண்டும். ஆண் குழந்தைக்கும் பெண்ணின் இயல்புகள், வேதனைகள், பிரச்னைகளைச் சொல்லிக்கொடுத்துப் புரியவைக்க வேண்டும்.

*எழுத்தாக்கம் :* **சிவன்**

*(அடுத்தவாரம் புஷ்பவனம் குப்புசாமி)*



**புஷ்பவனம் குப்புசாமி - அனிதா குப்புசாமி**

# நீங்கள் கேட்டவை - தராசு

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? தி.மு.க.வின் இரண்டாண்டு ஆட்சி பற்றிய உங்கள் மதிப்பீடு என்ன...?

! அதிகபட்ச மக்களுக்கு நன்மை தராத திட்டங்கள், சொந்தங்களுக்கு நன்மையளிக்கும் காரியங்கள் ஆகியவற்றில் காண்பிக்கப்பட்ட அபார சுறுசுறுப்பு.

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

? அணு ஆயுதங்களுடன் கூடிய நீர்மூழ்கிக் கப்பல்களை சீனா தயாரித்திருப்பது குறித்து இந்தியா கவலை தெரிவித்தும் இடதுசாரிகள் இடிச்ச புளி மாதிரி இருக்கிறார்களே?

! அதற்கு மட்டுமா? நேற்றுவரை அருணாசல பிரதேசத்தையும் இன்று சிக்கிமையும் தங்களுடையது என்று சீனா உரிமை கொண்டாடுவதைக்கூட அவர்கள் எதிர்க்காமல், இடித்த புளியிலும் அடைத்த புளியாக மௌனம் காக்கிறார்கள்!

● என்.காளிதாஸ், சிதம்பரம்

? எம்.எல்.ஏ தொகுதி மேம்பாட்டு நிதி ஒன்றரை கோடியாக உயர்த்தப்பட்டுள்ளதே?

! இந்த நிதி மிகவும் விரயமாக்கப்பட்டிருக்கிறது என்று மத்திய தணிக்கை அதிகாரியின் அறிக்கையும் கூடவே வந்திருப்பது டபுள் வேதனை தருகிறது; தொகுதி நிதியையே விணடிப்பவர்களுக்குச் சம்பள உயர்வு என்பது ட்ரிபிள் வேதனை!

● கே.எஸ்.கோவர்த்தனன், சென்னை - 42

? 'காங்கிரஸ் கட்சியில் முன்பெல்லாம் விவாதங்கள் விரிவாக நடத்தப்பட்டு, அனைவரது கருத்தும் கேட்கப்பட்டது. தற்போது இந்த நடைமுறையில் ஒழுங்கீனம் ஏற்பட்டுள்ளது' என்று அர்ஜுன் சிங் குறைபட்டுக் கொண்டுள்ளாரே?

! அதுக்குத்தான் வருத்தம் தெரிவித்து, காந்தி குடும்பத்தினரிடம் தமக்குள்ள விசுவாசத்தை மறுபடியும் பிரகடனப் படுத்திவிட்டாரே! காங்கிரஸ் கட்சியில் விவாதம், மகாத்மா காந்தி காலத்தோடு

பாவுவுக்குப்

* காட்டிய வழி

முடிஞ்சு போச்சுங்க!

● **லலிதா செல்லப்பா,**
**சென்னை - 75**

***? ஐந்து வருடங்களுக்கு முன்பு இருந்த கலைஞர் கருணாநிதிக்கும், இன்று உள்ள கலைஞர் கருணாநிதிக்கும் என்ன வித்தியாசம்?***

! நாட்டையும் வீட்டையும் பற்றிய கவலை, அவருக்கு ஐந்தாறு மடங்கு அதிகரித்திருப்பதுதான் வித்தியாசம்!

● **என்.காளிதாஸ், சிதம்பரம்**

***? சீனாவில் கடும் நில நடுக்கத்தால் 8500 பேர் பலியானது பற்றி...?***


* எழுப்பிய அரண்

# பாதுகாப்பு அரண் ஏன்?

! சம்பவம் மிகப் பெரிய பரிதாபம். மீண்டெழ, சீனா காட்டும் வேகம் அபூர்வம்; பிற நாடுகளின் உதவி தேவை இல்லை என்று மறுப்பது தன்மானம்; ஒலிம்பிக்கை ஒத்திப் போடாதது ஆச்சர்யம்; அணு உலைகள் பாதிக்கப்படவில்லை என்ற அவசர அறிக்கை உருவாக்குவது சந்தேகம்.

● **என்.உஷாதேவி, மதுரை**

***? பிற கட்சிகளின் வெற்றி தோல்வியை காங்கிரஸ் நிர்ணயிக்கிறது என்று அமைச்சர் வாசன் கூறியுள்ளது பற்றி...?***

! காங்கிரஸ் தன்னுடைய வெற்றியைத் தானே நிர்ணயிக்க முடியாதபோது, இப்படித்தான் அல்ப பெருமைகளைத் தேடிக் கொள்ள வேண்டும்!

● **ஆர்.நாகராஜன், சென்னை - 117**

***? ஆட்சிக்கு ஆதரவு தரும் கட்சிகளே போராட்டங்களையும் அறிவிப்பது சரியா?***

* கூடிய கவலை!

! குற்றம் குறைகளை எடுத்துக் காட்டி ஆக்கபூர்வமான மாற்று யோசனைகளைத் தெரிவிப்பது சரி; ஆர்ப்பாட்டங்கள், போராட்டங்கள் நடத்துவது தவறு. ஆட்சியாளரும் ஆதரவுக் கட்சிகளை அலட்சியம் செய்யாது, அரவணைத்துச் செல்ல வேண்டும்.

● **கருப்பம்புலம் சித்திரவேலு,**
**நெய்விளக்கு**

***? சாலை விபத்து உயிரிழப்பைத் தடுக்க ஒருங்கிணைந்த நடவடிக்கை தேவை என்கிறாரே அப்துல் கலாம்?***

! ரொம்ப சரி. இதில் தகுதியற்றோருக்கு ஓட்டுனர் லைசன்ஸ் வழங்குவதில் தொடங்கி, குடித்துவிட்டு ஓட்டுவது வரை பல்வேறு அம்சங்கள் உள்ளன. எல்லாவற்றிலும் லஞ்ச-ஊழல் விளையாடுகிறது. நடவடிக்கை எடுக்கும் நபரைத்தான் காணோம்!

● **வி.எம்.செய்யது புகாரி,**
**அதிராம்பட்டினம்**

***? இனி வரும் காலங்களில், தமது முதுமை கருதியாவது சினிமா விழாவில் கலந்துகொள்வதை தமிழக முதல்வர் தவிர்ப்பாரா?***

! ஊஹூம்! பிறந்து வளர்ந்த வீட்டை அவரால் மறக்கவோ ஒதுக்கவோ முடியாது!

● **ப.ராமகிருஷ்ணன்,**
**ஆவணத்தாங்கோட்டை**

***? தமிழகத்தில் 22 மாவட்டங்களில்***

**? எய்ட்ஸ் நோய் பாதிப்பு அபாயகரமான நிலையில் அதிகரித்து வருகிறதாமே? அரசின் விழிப்புணர்வு விளம்பரங்களால் பயன் ஏதும் இல்லையா?**

! பாலுணர்வை விழிப்புறச் செய்யும் பல்லாயிரம் மடங்கு விளம்பரங்கள், மீடியா நிகழ்ச்சிகள், மதுக்கடைகள் மத்தியில் அரசின் முயற்சி, சமுத்திரத்தில் கரைந்த பெருங்காயம்.



* கோரிய மன்னிப்பு

* வடிந்த வாசகம்!

● **த.சத்திய நாராயணன், அயன்புரம்**

**? ஜெய்ப்பூர் குண்டு வெடிப்புச் சம்பவம் பற்றி...?**

! இந்தியாவின் பாதுகாப்பற்ற இறையாண்மை மீது வீசப்பட்ட மற்றொரு குண்டு! தீவிரவாதிகளுக்கு மேலும் ஒரு சம்பவம்! ஆட்சியாளர் தெரிவிப்பது 'ஜஸ்ட்' ஒரு கண்டனம்! மக்கள் அனுபவிப்பதோ பெருந்துயரம்.

● **கே. சண்முகம், ஆதமங்கலம்புதூர்** *

**? டி.ஆர்.பாலு மீது மறுக்க முடியாத ஊழல் குற்றச்சாட்டு வெளியாகியுள்ள நிலையிலும் பிரதமரோ, சோனியாவோ, தமிழக முதல்வரோ அவரைக் கண்டிக்காமல் பாதுகாப்பு அரணாக விளங்குவது ஏன்...?**

! பாதுகாப்பு அரண் அவருக்கு மட்டும் அல்ல என்பதால்.

● **ச.ஆ.கேசவன், கோவில்பட்டி**

**? அதிர்ஷ்டம் ஏன் ஏழைகள் பக்கம் அணுகுவதில்லை!**

! வாய்ப்புகளைச் சரியாகப் பயன்படுத்திக்கொள்வதற்குப் பெயர்தான் அதிர்ஷ்டம். இதில் ஏழை - பணக்காரன் என்ற பாகுபாடுக்கு இடமில்லை! இதற்கு எத்தனையோ வாழ்க்கை வரலாறுகள் சான்று கூறுகின்றன.

● **மு. மதிவாணன், ஆரூர்**

**? கல்வியின் அவசியத்தை வலியுறுத்தி நடிகர் சூர்யா குறும்படம் தயாரித்துள்ளாரே?**

! வரவேற்கப்பட வேண்டிய முயற்சி. கட்-அவுட்டுக்கு பீர் அபிஷேகம், பாலபிஷேகம் செய்யும் ரசிகர்களை, நட்சத்திரங்கள் இதுபோன்ற செயல்களுக்கு மடை மாற்றிவிட்டால், நாட்டில் கல்வியின் அவசியம் கூடுதலாக உணரப்படும்.

● **மஞ்சுதேவன், நவிமும்பை**

**? நாதஸ்வரம் என்றதும் நினைவுக்கு வரும் வித்வான்?**

! அன்றைய நாளில் அனேகம் பேர்; இன்றைய தேதியில் இஞ்சிக்குடி சுப்பிரமணியம்.

● **மதுரை முருகேசன், தஞ்சாவூர்**

**? 'சென்னை நிச்சயம், டெல்லி லட்சியம்' என்ற வாசகத்தோடு புது வியூகம் அமைத்துள்ள தே.மு.தி.க. பற்றி...?**

! கோஷம் ஜோரு; சாதிப்பது பேஜாரு!



* தொலைத்த பெருமை!

❒ ரூ. 100 பரிசு பெறுபவர்:
**எம்.பாஸ்கர், திண்டுக்கல்**

* ரூ. 50 பரிசு பெறுபவர்:
**கே.சண்முகம், ஆதமங்கலம்புதூர்**

# உங்கள் வாழ்வு வளமாகட்டும்! உங்கள் செல்வம் பெருகட்டும்!






## BLB நிறுவனம் வழங்கும் இரண்டு புதிய மனைப்பிரிவுகள்.

## முதலீட்டுக்கான ஓர் அரிய வாய்ப்பு.

கடந்த 10 ஆண்டுகளாக, BLB எஸ்டேட்ஸ் வெளிநாட்டுவாழ் இந்தியர்கள் உள்பட ஆயிரக்கணக்கான வாடிக்கையாளர்களுக்கு வளமிக்க மனைகளை வழங்கி அவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கையைப் பெற்றுள்ளது. BLBயின் முந்தைய திட்டங்கள் தற்போது கற்பனைக்கெட்டாத வகையில் மதிப்பு கூடி நம்பமுடியாத இலாபங்களை வாடிக்கையாளர்களுக்கு ஈட்டித் தந்துள்ளது. வியப்பூட்டும் வகையில் பன்மடங்கு இலாபம் பெற இன்றே முதலீடு செய்ய அழைக்கிறோம்.



### ஸ்ரீ ஹயக்ரீவா நகர்

மஹிந்த்ரா வேர்ல்ட் சிட்டி மற்றும் செங்கல்பட்டு அருகே.

(DTCP அனுமதி எண். 117/2007)



### ஸ்ரீ நரசிம்மா நகர்

பூந்தமல்லி மற்றும் ஆவடி அருகில்

(CMDA அனுமதி எண்.37/2007)

**சிறப்பு அம்சங்கள்:** ✓ முழுவதும் தார்ச் சாலைகள் ✓ சுற்றிலும் வேலியிடப்பட்டது ✓ உடனே வீடு கட்டலாம் ✓ அருகிலேயே வீடுகள் ✓ சுவையான நிலத்தடி நீர் ✓ சுலபமாக சென்று வர ரயில் மற்றும் பஸ் வசதி ✓ தெளிவான பத்திரங்கள் ✓ 5 ஆண்டு காலம் பாதுகாப்பு சேவை.

உடன் வசதி






இலவசமாக மனையை பார்வையிட அழைக்கவும் :

**28345104 / 05 / 06**

**BLB ESTATES PRIVATE LIMITED**

"SREE AUDISESHA BHAVAN", New No. 21, Chinnaiah Street, (Off. G.N. Chetty Road & Thirumalai Pillai Road), T.Nagar, Chennai - 600 017. E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com




ஐ.பி.எல். வழியாக நிறைய புது நட்சத்திரங்களைப் பார்த்து வருகிறோம். எதிர்பார்க்கப்பட்ட பத்ரிநாத், இன்ப அதிர்ச்சி அளித்த கோனி, இவர் பெயர்தான் சென்ற வாரம் டோனி என்று தவறுதலாக இடம் பெற்றுவிட்டது. ஆனால், இந்திய அணியிலிருந்து காணாமல் போன ஆந்திராவைச் சேர்ந்த வேணுகோபால் ராவ், ஐ.பி.எல். ஆட்டங்களில் இப்படியொரு சூறாவளி ஆட்டம் ஆடுவார் என்று ஒருவரும் எதிர்பார்க்கவில்லை.

சத்தமில்லாமல் டென்னிஸ் உலகில் ஒரு விஷயம் நடந்துகொண்டிருக்கிறது. கிரிக்கெட்டில் 38 வயதானால்கூட ஒரு வீரரை அவ்வளவு சுலபமாக வீட்டுக்கு அனுப்ப முடியாது. உதாரணம், மேத்யூ ஹேடன். ஆனால்,



டென்னிஸில் பல வீரர்களும் வீராங்கனைகளும் 26 வயதுக்குள், 'போதும் இந்த வாழ்க்கை' என்று சர்வசாதாரணமாக ஓய்வு பெற்றுவிடுகிறார்கள். டென்னிஸின் பிதாமகனாகக் கருதப்படும் ஜான் போர்க் (ஸ்வீடன்), குட் பை சொன்னபோது அவரது வயது 26. அவரது பாணியில் பெல்ஜியத்தைச் சேர்ந்த ஜெஸ்டின் ஹெனின் சமீபத்தில் ஓய்வு அறிவிப்பை வெளியிட்டபோது, அச்செய்தி பலரின் இதயத்தைத் தாக்கியது. அதற்கு இரு காரணங்கள்- ஒன்று அவரது வயது 26. இன்னொன்று, ரிடையர்மெண்ட் செய்தியை அறிவித்த தினத்தன்றுகூட அவர் தான் நம்பர் ஒன் வீராங்கனை. 'எனக்கு இள வயதுதான். ஆனால், ரிடையர்மெண்டுக்குச் சட்டதிட்டங்கள் கிடையாது அல்லவா. நான் வருத்தப்படவில்லை. திருப்தியாக உள்ளேன்' என்கிறார் ஹெனின். 'வருடம் முழுக்க ஆடிக்கொண்டே இருப்பதுதான் சலிப்பைத் தந்து, இதுபோன்ற முடிவுகளை எடுக்கத் தூண்டுகிறது' என்கிறார்கள் விமர்சகர்கள். இனி ஜீவனோபாயத்துக்காக ஹெனின் குமாஸ்தா வேலைக்குச் செல்லக்கூடும் என்றெல்லாம் யாரும் தப்புக் கணக்கு போட்டுவிட வேண்டாம். இதுவரைக்குமே ஹெனின் சம்பாதித்த தொகையே நூறு கோடியை எட்டுகிறது!

இந்திய ஹாக்கி ஃபெடரேஷன் ஒழிக்கப்பட்டு, இந்திய ஒலிம்பிக் கவுன்சிலின் பொறுப்பில் உள்ள இந்திய ஹாக்கி அணி, தன் முதல் முயற்சியிலேயே பழம் பறித்து வந்துள்ளது. சுல்தான் அஷ்லான் ஷா போட்டியில் இரண்டாவது இடம். இந்திய அணி ஒலிம்பிக் போட்டிக்குத் தகுதிபெறாவிட்டாலும் மூன்று ஒலிம்பிக் (பாகிஸ்தான், பெல்ஜியம், கனடா) அணிகளை அப்போட்டி



# ஆட்டத்தில் ஏன்

யில் விழ்த்தியதும் ஆறுதலைக் கொடுக்கக் கூடிய ஒன்று. நம் கண்முன்னால் கிரிக்கெட் அபாரமாக மார்க்கெட் செய்யப்பட்டு வருகிறது. ஐ.பி.எல். வரவால் அரை டஜன் வீரர்களுக்குப் புதுவாழ்வு கிடைக்கப் போகிறது. ஆனால், இந்திய ஹாக்கி கழிவிரக்கம் கொண்டே இத்தனை நாளும் தன் குறைகளை மறைத்துத் தன்னை வீணடித்துவிட்டது. ஹாக்கியை முதலில் விளிம்புநிலை மக்கள் வரைக்கும் கொண்டு சென்றால் மட்டுமே, கிரிக்கெட்போல ஹாக்கிமீதும் எல்லா தரப்பினருக்கும் மோகம் ஏற்படும். சுல்தான் அஷ்லான் போட்டி போன்ற முக்கியமான ஆட்டங்களை தூர்தர்ஷனில் ஒளிபரப்பத் தொடங்க வேண்டும். ஒரு காலத்தில் தூர்தர்ஷனில் முக்கியமான டென்னிஸ், ஹாக்கி போட்டிகள் எல்லாம் ஒளிபரப்பாகி வந்தன. ஆனால், காலப்போக்கில் ஈ.எஸ்.பி.என்., ஸ்டார் சேனல்கள் வசதி இருந்தால் மட்டுமே அவற்றைத் தொலைக்காட்சியில் காண்பது சாத்தியம் என்றாகிவிட்டது. இத்தனைக்கும் தூர்தர்ஷனுக்குத் தனியாக ஒரு விளையாட்டு சேனல் வேறு! கிரிக்கெட் போல மற்ற விளையாட்டுகளால் வருமானம் வருவதில்லை என்று, தூர்தர்ஷன் சொல்லலாகுமா?





# பாரபட்சம்?

**வி**ஜய் இப்படி ஏமாத்திட்டு செகண்ட் ஷோ போறான்னு தெரிஞ்சதும், நானும் அவரும் ரொம்பப் பதறிட்டோம். ஆனா, அவனை எங்களால என்ன செய்ய முடியும்? தலைக்கு மேல வளர்ந்த பிள்ளை. நான் அவனை என்னிக்குமே அடிச்சது கிடையாது. என் கணவர் அப்படி இல்லை. ரொம்ப கண்டிப்பானவர். சமயத்துல அடிச்சிடுவார். அன்றைக்கு என்னவோ அவர் அவனை அடிக்கலை. ரெண்டு பேருமா சேர்ந்து அவனுக்கு அட்வைஸ் பண்ணினோம்.

'காலம் ரொம்பக் கெட்டுக்கெடக்கு. கத்தியைக் காட்டி வழிப்பறி பண்றது, ஆளைக் கடத்தறதுன்னு என்னென்னவோ நடக்குது. ஏதாவது ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆயிப்போயிடுச்சன்னா என்ன பண்றது? சினிமாவுக்குப் போ! வேணாம்னு சொல்லலை. ஃபர்ஸ்ட் ஷோவுக்குப் போ!' நாங்க சொன்னதை விஜய் 'ரொம்ப அமைதியா, பொறுமையா கேட்டுக்கிட்டான்.

'**வி**ஜய் கலகலப்பாவே பேச மாட்டார். ரொம்ப அமைதி. எப்பப் பார்த்தாலும் இறுக்கமா இருப்பார்...' அப்படின்னுதான் நிறைய பேர் சொல்லிக் கேள்விப்பட்டிருப்பீங்க. அது உண்மை தான். அதுக்குக் காரணம் இருக்கு. அந்தக் காரணத்துக்குப் பின்னால் ஒரு சோகம் இருக்கு. பத்து வயசு வரைக்கும் கன்னுக்குட்டி மாதிரி துள்ளிக்கிட்டு, கலகலப்பாத்தான் இருந்தான். திடீர்னு ஒரு நாள் அவனோட துறுதுறுப்பு மொத்தமும் சட்டுன்னு காணாமப் போயிடுச்சு. ஏன் தெரியுமா? சொல்றேன்.

அப்போ நான் மேடைக் கச்சேரிகள்ல பாடுவேன். இளையராஜா சார் குழு, கங்கை அமரன் சார் குழு, இன்னும் சில இசைக்குழுக்கள்ல பாடிக்கிட்டு இருந்தேன். நானும் என் கணவரும் சேர்ந்து





## ஷோபா சந்திரசேகர்

சம்பாதிச்சதுலதான் ஏதோ குடும்பம் ஓடிக்கிட்டு இருந்துச்சு. ரொம்பக் கஷ்டம். நான் சினிமாவுல பாடின முதல் பாட்டை என்னால எப்பவும் மறக்க முடியாது. எம்.எஸ்.சார் இசையில் 'ஒரு மகராஜா ஒரு மகராணி, இந்த இருவருக்கும் இவள் குட்டி ராணி'ன்னு ஒரு பாட்டு வருமே, அந்தப் பாட்டு. அந்தப் பாட்டை இப்ப நினைச்சாலும் அடிவயிறு கலங்குது. இந்தப் பாட்டுக்கும் என் வாழ்க்கைக்கும் ரொம்பவும் தொடர்பு இருக்கு.

விஜய் எனக்கு ஒரே பிள்ளைன்னு எல்லோரும் நினைச்சுக்கிட்டு இருக்காங்க. அப்படி இல்லை. விஜய்க்கு அப்புறம் இன்னொரு குழந்தையை நான் என் வயித்துல சுமந்தேன். விஜய்க்கு ரொம்ப சந்தோஷம். 'எனக்குத் தம்பி பொறக்கப் போறான்'னு துள்ளிக் குதிச்சுக்கிட்டு இருந்தான். குழந்தைக்கு 'வினோத்'ன்னு பேரெல்லாம்கூட வச்சிட்டோம். ஆனா, என் துரதிர்ஷ்டம்னுதான் சொல்லணும். ஒன்பதாவது மாசத்துல வயித்துலயே இறந்து போயிடுச்சு அந்தக் குழந்தை. விஜய் ரொம்ப அழுதான்.

அதுக்கப்புறம் எனக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. 'வித்யா'ன்னு பேரு வச்சோம். அவ பிறந்த நேரம் எங்களுக்கு ரொம்ப நல்ல நேரமா இருந்தது. அதுவரைக்கும் உதவி இயக்குநரா இருந்த என் கணவருக்கு, டைரக்டராகுற வாய்ப்புக் கிடைச்சது. 'சட்டம் ஒரு இருட்டறை' படம் பண்ண ஆரம்பித்தார்.

விஜய்க்கு வித்யான்னா அவ்வளவு இஷ்டம். அவளையே சுத்திச் சுத்தி வருவான். தூக்கி வச்சுக்கிட்டுக் கொஞ்சுவான். கீழேயே இறக்கமாட்டான். வித்யாவுக்கு ஒண்ணரை வயசு ஆனப்போ அது நடந்தது. ஒரு நாள் அவ திடீர்னு மயக்கம் போட்டு விழுந்துட்டா. நானும் என் கணவரும் பதறியடிச்சுக்கிட்டு அவளைத் தூக்கிக்கிட்டு ஆஸ்பத்திரிக்கு ஓடினோம். என்னென்னவோ டெஸ்ட் எல்லாம் பண்ணினாங்க. கடைசியில டாக்டர் தயங்கித் தயங்கி விஷயத்தைச் சொன்னார். 'வித்யாவுக்கு பிளட் கேன்சர். அவ இன்னும் ஒரு வருஷமோ, ரெண்டு வருஷமோதான் உயிரோட இருப்பா.' அதைக் கேட்டு நான் துடிச்சுப்போயிட்டேன். கண்ணுல இருக்கற தண்ணியெல்லாம் வத்திப் போற மாதிரி அழுதேன். என்னால வேற என்ன பண்ண முடியும்?

# தனிமையில் விஜய்!

விஜய் எப்போ பாத்தாலும் வித்யா கூடதான் விளையாடிக்கிட்டு இருப்பான். அவனோட மூணாவது பிறந்தநாளை ரொம்ப கிராண்டா கொண்டாடினோம். மூணரை வயசெல்லாம்

## என்ன பரிசு?

● சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட்...

● குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ்...

சாகற வயசா? அந்தப் பிஞ்சுக் குழந்தை, அந்தச் சின்ன மொட்டு, திடீர்னு ஒரு நாள் எங்களை விட்டுப் போயிட்டா. அவளோட இழப்பு எங்க குடும்பத்துல இருக்கற எல்லாரையுமே பாதிச்சது. விஜய்யை ரொம்ப பாதிச்சது. இத்தனை நாள் ரத்தமும் சதையுமா வீட்டுல வளைய வந்துக்கிட்டு இருந்த தங்கச்சி இல்லைன்னதும், அவன் ஆடிப்போயிட்டான்.

அப்போ அவனுக்குப் பத்து வயசு. எல்லார்கிட்டயும் கலகலப்பாப் பேசறது குறைஞ்சு போயிடுச்சு. தனியா இருக்க ஆரம்பிச்சான். ரூம்லயே அடைஞ்சு கிடக்க ஆரம்பிச்சான். ஏதாவது கேட்டா பதில் சொல்வான். அவ்வளவுதான். அவனோட உற்சாகம், துறுதுறுப்பு எல்லாம் சுத்தமா காணாமப் போயிடுச்சு. அந்தப் பழக்கம் இன்னிக்கும் தொடர்ந்துக்கிட்டுதான் இருக்கு. வீட்டுக்குள்ள வருவான். என்னைப் பார்த்ததும் புருவத்தை உயர்த்திக் காமிப்பான். 'ஓ! எப்படி இருக்கேன்னு விசாரிக்கறான்'ன்னு நாமளா புரிஞ்சுக்கணும். அவ்வளவு தூரத்துக்கு அவனோட பேச்சு குறைஞ்சு போயிடுச்சு.

இவ்வளவு சின்ன வயசுல அவன் இப்படி இறுக்கமா இருக்கறது எங்களுக்குப் பிடிக்கலை. என் கணவர் என்ன செய்யலாம்னு யோசிச்சார். கடைசியில அவனை சினிமாவுல நடிக்க வைக்கலாம்னு முடிவு செஞ்சார். அப்போ, பி.எஸ்.வீரப்பா சார் 'வெற்றி'ன்னு ஒரு படம் தயாரிச்சார். அதுல சின்ன வயசு விஜயகாந்தா நடிக்கறதுக்கு ஒரு பையன் தேவைப்பட்டான். அந்த ரோல்ல விஜய்யை நடிக்க வைக்கலாம்னு என் கணவர் சொன்னார்.

முதல் படம். அதுலயும் ரொம்ப சோகமான காட்சிதான் விஜய்க்கு. கதைப்படி, விஜய் ஒரு பெட்ரோல் பங்க்ல உக்காந்து படிச்சுக்கிட்டு இருப்பான். அவனோட அப்பாவா வர்ற கே.கே.செளந்தர், அந்த பெட்ரோல் பங்க்ல வேலை பார்ப்பார். அப்போ வில்லன் பி.எஸ்.வீரப்பா வந்து, பெட்ரோல் டியூபைப் பிடுங்கி, பெட்ரோலை கே.கே.செளந்தர் மேல ஊத்தி, கொளுத்தற மாதிரியான காட்சி. விஜய் அதைத் திகைச்சுப் போய்ப் பாத்துக்கிட்டு இருப்பான். அந்த சீன் ரொம்ப நல்லா வந்தது. அவன் நடிச்ச முதல் படத்தோட பேர் 'வெற்றி'. அது வாழ்நாளெல்லாம் அவன் கூடவே வரப்போறது அப்போ எங்களுக்குத் தெரியலை.

அவனை நல்ல மூடுக்குக் கொண்டு வர்றதுக்காக என் கணவர் செஞ்ச முயற்சிக்குப் பலன் இருந்தது. அவனுக்கு நடிக்கறதுல ஆர்வம் வந்துச்சு. அதுக்கப்புறம்,



# தொடர் சங்கிலிப் போட்டி கூப்பன்

கட் & கீப்



## விஜய் வின்னர்ஸ்-4

அந்தச் சின்ன வயசுலயே 'வசந்த ராகம்', 'குடும்பம்'னு நடிச்சுக்கிட்டு இருந்தான். எல்லாம் சின்னச் சின்ன ரோல். அப்புறம் 'சட்டம் ஒரு விளையாட்டு', 'இது எங்கள் நீதி' படங்கள்ல நடிச்சான். இந்த ரெண்டு படங்களுக்கும் கலைஞர் வசனம் எழுதியிருந்தார். 'இது எங்கள் நீதி' படத்துல தூக்குக் கயித்துல தொங்கற மாதிரி சீன்ல நடிச்சான். ஒரு நாள் முழுக்க அந்த சீனைப் படம் பிடிச்சாங்க. காலையிலிருந்து சாயந்தரம் வரைக்கும் தூக்குல தொங்கிக்கிட்டே இருந்தான் விஜய்!

எழுத்து வடிவம்: **பாலு சத்யா**

(தொடரும்)

ஹலோ வாசகர்களே!

**ஷோபா சந்திரசேகர் எழுதற, 'என் செல்ல தளபதி' தொடர் அசத்தலா இருக்குதானே? நீங்களும் சும்மா அசத்தறீங்க இல்ல. இரண்டாவது, மூன்றாவது வாரப் போட்டிக்கு மளமளன்னு என்ட்ரீஸ் குவியுது!**

- விஜய் வின்னர்ஸ் -1 தொடர் சங்கிலிப் போட்டிக்கான முடிவும், இந்த வார கூப்பனும் பக்கம் - 94ல் உள்ளன.
- பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம்பர் போட்டி, வியப்பான மெகா பரிசுகள்!
- நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரிலிருந்து வரும். சரியான விடைகளை 'டிக்' அடிச்சு கூப்பனையும் நிரப்பி, அந்தப் பக்கத்தைக் கத்தரிச்சு அனுப்பணும்.
- ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு!
- வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந்துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங்கிலி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம் 93-ஆம் பக்கம் இருக்கு)
- பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப்பன்கள் அனைத்தையும் இணைச்சு அனுப்பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.
- இந்த பதிமூன்று வாரத்தில் உங்களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனாலும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க. உங்க நகரத்து ஏஜென்ட் மூலமா கிடைக்க உதவி செய்யறோம்.
  ஸோ, டயல் : 4343 8888
- போட்டி குறித்த இறுதி முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
- போட்டியில் கலந்துக்கங்க; பரிசுகளை அள்ளுங்க!



# விஜய் வின்னர்ஸ் -1

## தொடர் சங்கிலிப் போட்டி பரிசு பெற்றோர் விவரம்...

1. மணிமாறன், திருவண்ணாமலை
2. பி.ஸ்ரீநிவாசன், சென்னை - 45
3. எஸ். சபரிநாதன், தர்மபுரி
4. கா.சங்கர், விழுப்புரம்
5. கே.ஜகந்நாதன், சேலம் - 1
6. அ.குணபாஸ்கரன், கடலூர்
7. ஆ.பெரியசாமி, கடலூர்
8. கே.லோகநாதன், சென்னை - 42
9. வெ. லட்சுமிநாராயணன், வடலூர்
10. துரை.இராமகிருஷ்ணன், திருச்சி

* முதல் பத்து கூப்பன்களை அனுப்பிய மேற்கண்டோருக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட் பரிசாக அனுப்பி வைக்கப்படும்.

* குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப் பட்ட 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ் அனுப்பி வைக்கப்படும்.

---

## இந்த வாரக் கேள்விகள்!

கடைசி தேதி : 5.06.2008

1. விஜயகாந்துக்கு தம்பியாக விஜய் நடித்த படம்?
   - ☐ செந்தூர பாண்டி
   - ☐ சீவலப்பேரி பாண்டி
2. 'என்னைத் தாலாட்ட வருவாளா' பாடல் இடம்பெற்ற படம்?
   - ☐ காதலுக்கு மரியாதை
   - ☐ மனைவிக்கு மரியாதை
3. விஜய் - சூர்யா சேர்ந்து நடித்த படம்?
   - ☐ நேருக்கு நேர் ☐ லவ் டுடே
4. ப்ரியமுடன் படத்தில் விஜய்க்கு ஜோடி?
   - ☐ கௌசல்யா ☐ ஜெனிலியா
5. குழந்தை நட்சத்திரமாக விஜய் நடித்த முதல் படம் எது?
   - ☐ வெற்றி ☐ வசந்தராகம்

பெயர் : ............................................................ வயது : ............

முகவரி : ............................................................................................

............................................................................................................

செல் : ............................ இ.மெயில் : ...................................................

*போட்டி கூப்பன் அனுப்ப வேண்டிய முகவரி :*

**விஜய் வின்னர்ஸ் போட்டி - 4,**

கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு,

# கனவு காணுங்கள் கலெக்டராகலாம்!

தஞ்சாவூர் - அரியலூர் சாலையில் சற்று உள்வாங்கியிருப்பது புனல்வாசல் கிராமம். இங்கே பெரும்பாலும் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் வசித்து வருகின்றனர். வேறு சமூகத்தினர் கணிசமாக இருந்தாலும், சமூக நல்லிணக்கம் மிக அருமையாக அனுசரிக்கப்படுகிறது. இப்போது இந்தக் கிராமத்தினர் அனைவரும், 'அரவிந்தன் எப்போது வருவார்?' என்று எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருக்கின்றனர்.

அரவிந்தன்? இந்தப் பகுதியிலிருந்து முதன்முதலாக ஐ.ஏ.எஸ்.தேர்வில் வெற்றி கண்டிருக்கும் இளைஞர்தான் அரவிந்தன்.

★ அசத்தப்போகும் ஐ.ஏ.எஸ். அதிகாரிகள்

இவருக்குத் தமது ஏரியாவில் பெரிய பாராட்டு காத்திருக்கிறது. அரவிந்தனின் தந்தை, உள்ளூர் அரசு நடுநிலைப் பள்ளியில் பி.டி.மாஸ்டர். அம்மா, தம்பி, தங்கை என்று சின்ன குடும்பம். இத்தனை வருட காலம் குடிசை வீட்டில் வசித்து வந்தவர்கள், இப்போதுதான் கடன் வாங்கி வீடு கட்டியிருக்கிறார்கள். சாப்பாட்டு அரிசிக்குப் பிரச்னை இல்லாமல் கொஞ்சம் நிலமும் இருக்கிறது.

''இந்தக் கனவு எப்போது பலிச்சிட்டது?''

''ரொம்ப சிம்பிள். மக்களோடு நேரிடையாகத் தொடர்பு இருப்பதுபோல் வேலை அமைய வேண்டும் என்பதே என் ஆசை. குறிப்பாகச் சொல்வதென்றால், ஜாதி சான்றிதழ் மற்றும்



★ அரவிந்தன்

வேறு பல காரியங்களுக்காக தாசில்தார் அலுவலகம் செல்வேன். படிக்காத கிராம மக்களை, அலுவலர்களும், தரகர்களும் சுரண்டுவதைப் பார்த்து வேதனைப் பட்டுப் போயிருக்கிறேன். 'மக்களுக்கு உதவும் வகையில் வேலை கிடைக்க வேண்டும்' என்பதுதான் என் கனவு. அதுவே, என்னை ஐ.ஏ.எஸ். என்ற லட்சியத்தை நோக்கி முன்னேற வைத்தது.''

ப்ளஸ் டூ முடித்தவுடன், பி.டெக். லெதர் தொழில்நுட்பம் என்று ட்ராக் மாறி மூன்றாயிரம் ரூபாய் சம்பளத்தில் வேலை

செய்திருக்கிறார். 'ஐய்யய்யோ... வாழ்க்கை இப்படியே முடிந்து போயிடுமோ என்று சுதாரித்துக்கொண்டு வேலைக்குச் செல்வதை நிறுத்திவிட்டு, ஐ.ஏ.எஸ். தேர்வுக்கான படிப்பில் குதித்துவிட்டேன்'' என்கிறார் அரவிந்தன்.

கிராமப் பகுதியில் இருந்துகொண்டு ஐ.ஏ.எஸ். முதல் நிலைத் தேர்வு எழுத மிகவும் சிரமப்பட்டிருக்கிறார். ''எங்க கிராமத்தில் நெட் வசதி கிடையாது. ரெஃபரென்ஸ் என்று பல விலை உயர்ந்த புத்தகங்கள் தேட வேண்டியிருக்கும். அதெல்லாம் கிடைக்காது. சந்தேகங்களுக்கு யாரிடம் பதில் வாங்குவது என்று ஆட்களைத் தேட வேண்டியிருக்கும். நடப்புச் சங்கதிகளுடன் நமக்குத் தொடர்பிருக்காது. கூட்டுப் படிப்பு சாத்தியம் இல்லை. இப்படி கிராமப் பகுதி இளைஞர்கள், ஐ.ஏ.எஸ். படிப்பில் சங்கடங்களைச் சந்திக்க வேண்டியிருப்பதால், பல இளைஞர்கள் துணிவதில்லை. துணிந்து சென்னை வந்தால், தங்க இடமும் சாப்பாடும் பிரச்னைகள். இதற்காக நடத்தப்படும் அரசு இல்லத்தில்கூட கட்டணம் வசூலிக்கிறார்கள். இந்தச் சூழலில் எங்களைப் போன்றோருக்குக் கை கொடுக்கிறது மனித நேய அறக்கட்டளை'' என்றார் அரவிந்தன்.

சென்னையில் இயங்கும் மனித நேய அறக்கட்டளை இலவசமாக ஐ.ஏ.எஸ். பயிற்சி அளிக்கிறது. மாணவ, மாணவிகளுக்கு உணவும் தங்குமிடமும்கூட இலவசம். மனித நேய அறக்கட்டளையில் 12 மாணவ, மாணவிகள் இந்த முறை ஐ.ஏ.எஸ். தேர்வில் வென்றிருக்கிறார்கள்.

''ஐ.ஏ.எஸ். முதன்மை தேர்வு பாஸ் செய்தவர்கள், முதல் நிலை தேர்வுக்குச் செல்பவர்களுக்குச் சொல்லித் தருகிறார்கள். லேட்டஸ்டாக உள்ள எல்லா புத்தகங்களும் இங்கு உண்டு. படிப்பதுதான் எங்கள் வேலை; தில்லிக்கு ஒரு மாதம் முன்னரே அழைத்துச் சென்று தங்க வைத்து, நேர்முகத் தேர்வுக்குத் தயார் செய்கிறார்கள். பல ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகளை அழைத்து வந்து பலவிதமான நேர்முகப் பேட்டிகளை நடத்துகிறார்கள். இதனால் பயம் நீங்கி, தன்னம்பிக்கை பிறக்கிறது. தில்லிக்குச் செல்லும் செலவும் அறக்கட்டளையுடையதுதான்'' என்கிறார் அரவிந்தன்.



✱ சைதை துரைசாமி

மனித நேய அறக்கட்டளையைத் துவக்கி நடத்தி வருபவர் சைதை துரைசாமி. ''வறுமைக் கோட்டுக்குக் கீழே இருக்கும், ஆர்வமுள்ள நமது கிராமப்புற இளைஞர்களுக்கு, அரசு அதிகார மையங்களில் வேலை செய்யும் வாய்ப்பைப் பெருக்கவே இந்த இலவச சேவையைச் செய்து வருகிறோம். கோச்சிங்குக்கு மாணவ, மாணவிகளை, தேர்வு வைத்து பேட்டி நடத்திதான் தேர்ந்தெடுக்கிறோம். இங்கு நடத்தப்படும் பயிற்சியில் தேர்வாகி வேலையில் அமரும் இளைஞர்களிடம் நாங்கள் கேட்கும் வாக்குறுதி, அரசாங்க நலத் திட்டங்கள் பாமரனுக்கும் சென்றடையும் வகையில் செயல்படுவோம் என்பதும், இலஞ்சம் வாங்க மாட்டோம்'' என்பதும்தான் என்கிறார் சைதை துரைசாமி.

**நாங்கள் கேட்கும் வாக்குறுதி ஒன்றுதான்– "ஏழை மக்களுக்கு சேவை செய்வோம் இலஞ்சம் இல்லாமல் பணி செய்வோம்" என்பதுதான்**

– ஸ்ரீநி

படம்: சுந்தர்

'மிஸ்' பண்ணிடாதீங்க...




# குதூகலமாய்த் தயாரித்த கோகுலம்!

## சிறுகதைப் போட்டி அறிவிப்பு

# கோகுலம்

ஜூன் 2008 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57*Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.